# அபிராமி அந்தாதி – எளிய தமிழில்

ஜவஹர் கண்ணன்

படங்கள் – ஓவியர் கேஷவ்

மின்னூல் வெளியீடு : http://FreeTamilEbooks.com

**சென்னை**



# உள்ளடக்கம்

- அனைத்து வித அச்சமு மகல அருள் தாயே
- நல்லறிவு தோன்ற அருள் தாயே
- பக்தி பெருக அருள் தாயே
- புத்திர பாக்கியம் அருள் தாயே
- கவிபாடும் ஆற்றல் அருள் தாயே
- பகை அழித்து அருள் தாயே
- நிலம்,நீர்,வீடு,வாசல்,தோட்டம் அருள் தாயே
- ஸகல ஸௌபாக்யங்களும் அருள் தாயே
- ஸங்கீத ஓவிய கலைவல்லமை அருள் தாயே
- மனக்குறை தீர்த்து மகிழ்ச்சி அருள் தாயே
- பிறவிப் பிணி தீர்த்தருள் தாயே
- கர்ப்ப ப்ராப்தியருள் தாயே
- செய்தொழில் தலைசிறக்க அருள் தாயே
- விதியையும் வெல்ல வலிமை அருள் தாயே
- உரிமைப் பொருள் நிலைத்து நிற்கவே அருள் தாயே
- அச்சம் பகை நீக்கி அருள் தாயே
- சகல செல்வங்களும் அருள் தாயே
- பந்தங்களிலிருந்து விடுபட அருள் தாயே
- பெற்ற மகிழ்ச்சி நிலைத்திட அருள் தாயே
- நன்னடத்தை அருள் தாயே
- கவன சக்தி அருள் தாயே
- ஏவலர் பலர் அருள் தாயே
- சங்கடங்கள் தீர அருள் தாயே
- துன்பங்கள் நீங்க அருள் தாயே
- ஆயுத பயம் நீங்க அருள் தாயே
- செயற்கரிய செயல் செய்து புகழ் பெற அருள் தாயே
- அம்பிகையே உன்னருள் எந்நாளும் பெற அருள் தாயே
- யோக சித்தி பெற அருள் தாயே
- பிரிந்த தம்பதியர் சேர அருள் தாயே
- அரசு காரியங்களில் வெற்றி பெற அருள் தாயே
- மனப் பக்குவம் பெற அருள் தாயே
- உள்ளத்தே உண்மை ஒளி உண்டாக அருள் தாயே
- மன நிலை தூய்மையாக அருள் தாயே
- மன உறுதி பெற அருள் தாயே
- எங்கும் தலைமையும் புகழும் பெற அருள் தாயே
- புகழும் தர்மமும் வளர அருள் தாயே
- வஞ்சகர் தொல்லை நீக்கி அருள் தாயே
- அருள் உணர்வு வளர அருள் தாயே
- அம்பிகையே உன் சொரூபம் எப்போதும் காண அருள் தாயே

**அபிராமி அந்தாதி – எளிய தமிழில்**

ஜவஹர் கண்ணன் – kannanjawkar@gmail.com

**படங்கள்**

ஓவியர் கேஷவ்

அட்டைப் பட வடிவமைப்பு – ஜெகதீஸ்வரன் நடராஜன் – sagotharan.jagadeeswaran@gmail.com

மின்னூலாக்கம் – ஜெயேந்திரன் – vsr.jayendran@gmail.com

மின்னூல் வெளியீடு – சிவமுருகன் பெருமாள் – sivamurugan.perumal@gmail.com

# ஆசிரியர் உரை

பாரத பழம் பெரும் பூமியில் சக்தி வழிபாடு என்பது அனைத்துக்கும் மேலான பரம்பொருள் வழிபாடு.சக்தி வழிபாட்டில் பேரொளியாய்த் திகழ்ந்தவர் "அன்னை ஆட்கொண்ட அபிராமி பட்டர்"

அன்னையின் ஸஹஸ்ர தள த்யானத்தில் ஆழ்ந்திருந்த பட்டர் சரபோஜி மன்னனின் அன்றைய திதி பற்றிய வினாவுக்கு நிலவுததும்பும் அம்மையப்பனைக் கருதி பௌர்ணமி என்று பதிலிறுத்தார். ஸஹஜ நிலை திரும்பியவுடன் தவறுணர்ந்து இதுவும் அன்னை செயலே அன்னையே சரி செய்யட்டு மென்றே அந்தாதி பாடலானார்.

அபிராமி தாஸன் என்று அன்போடு அழைக்கப்படும் திரு மீனாட்சி சுந்தரம் மோகன் அவர்களின் "அபிராமியும் லலிதையும்" உரை என் முயற்சிக்கு பெரிதும் உதவிற்று. அத்புத ஓவியர் திரு கேஷவ் வெங்கடராகவன் அவர்களின் ஓவியங்கள் என் எழுத்துக்கு மிகுந்த உற்சாகம் கொடுத்தன. முக நூலில் இதை எழுதியபோது நண்பர்கள் பலரும் உற்சாகமளித்து ஊக்குவித்தனர்

என்னைக் கவர்ந்த என் சித்தமுறை அபிராமியே ஆணையிட்டு தொடர்ச்சியாய் எளிய தமிழில் எழுத தூண்டுவித்தாள் குறையெனதாம் நிறை என்னம்மையுடையதாம்.
குறை பொறுத்து நிறை மகிழ்ந்து பொருத்தருள வேண்டுகிறேன்

இதனை மின் வடிவம் செய்ய பொறியாய் இருந்து வழியும் காட்டிய திரு என். சொக்கன் அவர்களுக்கு என் நெஞ்சார்ந்த நன்றிகள். திரு டி. ஸ்ரீநிவாசன் அவர்களின் முயற்சிக்கு என் வணக்கங்கள்.

அன்னை அபிராமி அனைவருக்கும் அருள் புரிய இறைஞ்சுகிறேன்

ஓம் ஸ்ரீ மாத்ரே நம:

ஜவஹர் கண்ணன்
மின்னஞ்சல் – kannanjawkar@gmail.com

சென்னை
23 12 2014

# சமர்ப்பணம்

சமர்ப்பணம் – அபிராமி பட்டர் மூலம் அன்னை அபிராமிக்கு
உதவிய நூல்கள் – அபிராமி அந்தாதி மூலம்
“அபிராமியும் – லலிதாவும்” உரை ஆசிரியர் அபிராமிதாஸன் மீனாட்சிசுந்தரம் மோகன்
ஸ்ரீ அபிநவ பாஸ்கர ட்ரஸ்ட்
ஓவியங்கள் – அத்புத ஓவியர் திரு கேஷவ் வெங்கடராகவன்

# அபிராமி அந்தாதி

அபிராமி அந்தாதி (அந்தம்-முடிவு, ஆதி-துவக்கம்) அபிராமிப்பட்டரால் இயற்றப்பட்டது. மயிலாடுதுறைக்கு அருகிலுள்ள திருக்கடையூரில் அபிராமி அம்மன் அமிர்தகண்டேசுவரர் கோயில் உள்ளது. மார்க்கண்டேயருக்கு சிவபெருமான் காட்சியளித்த தளம் திருக்கடையூராகும். ஒருபாடலின் முடிவு அடுத்த பாடலுக்கு துவக்கமாக அமையும் இலக்கணமுறை அந்தாதி ஆகும்.

# காப்பு

**மூலம்**

தார் அமர் கொன்றையும் சண்பக மாலையும் சாத்தும் தில்லை
ஊரர்தம் பாகத்து உமை மைந்தனே.-உலகு ஏழும் பெற்ற
சீர் அபிராமி அந்தாதி எப்போதும் எந்தன் சிந்தையுள்ளே-
கார் அமர் மேனிக் கணபதியே.-நிற்கக் கட்டுரையே.

**எளிய தமிழில்**

ஓம் ஸ்ரீ மாத்ரே நம:
ஈசனிடப் பாக முறை
இறைவி தன் மைந்தனே
வேழ முகத்தோனே
ஏழை நானும் அபிராமி
புகழ் பாடத் தலைப்பட்டேன்
சிரம மர்ந்து செலுத்துவாய்
செல்வ கணபதியே

1

# நல்வித்தையும் ஞானமும் நல்குவாய் தாயே



**மூலம்**

உதிக்கின்ற செங்கதிர், உச்சித் திலகம், உணர்வுடையோர்
மதிக்கின்ற மாணிக்கம், மாதுளம்போது, மலர்க்கமலை
துதிக்கின்ற மின் கொடி, மென் கடிக் குங்கும தோயம்-என்ன
விதிக்கின்ற மேனி அபிராமி, எந்தன் விழுத் துணையே

**எளிய தமிழில்**

உதயக்கதிராய் சிவந்த நெற்றியில்
இதயங்கவர் உச்சிச்சிந்தூரம் சிவக்க
மனமகிழும் மாணிக்கம் ஜொலிக்க
கொடிமேனி குங்குமமாய்க் கனியும்
அன்னை அபிராமியே என்துணை

## 2

# பிரிந்தவர்தமை இணைத்து வை தாயே

### மூலம்

துணையும், தொழும் தெய்வமும் பெற்ற தாயும், சுருதிகளின்
பணையும் கொழுந்தும் பதிகொண்ட வேரும்-பனி மலர்ப்பூங்
கணையும், கருப்புச் சிலையும், மென் பாசாங்குசமும், கையில்
அணையும் திரிபுர சுந்தரி-ஆவது அறிந்தனமே.

### எளிய தமிழில்

துணை நீயே தெய்வமே தாயே
இணை நீயே வேதத்தில் தொழிலே
கிளை நீயே வேரே மலரே ஞானமே
கணை மலர் வில் பாசமங்குசம் தரி
துணை திரிபுரசுந்தரி அறிந்தேனே

3

## ஸம்ஸார பந்தம் நீக்கு தாயே



**மூலம்**

அறிந்தேன், எவரும் அறியா மறையை, அறிந்துகொண்டு
செறிந்தேன், நினது திருவடிக்கே,-திருவே.- வெருவிப்
பிறிந்தேன், நின் அன்பர் பெருமை எண்ணாத கரும நெஞ்சால்,
மறிந்தே விழும் நரகுக்கு உறவாய மனிதரையே.

**எளிய தமிழில்**

அறிந்தேனுனை ரஹஸ்ய மந்திரமாய்
புகுந்தேன் சரண் உன்திருவடி தஞ்சமாய்
உணர்ந்தேன் உன்பெருமை யறியாச் சிறுமை
விழுந்தேன் இரண்டறக் கலந்தேனுன் பாதம்
பிரிந்தேன் உனையறியா மனிதரை

## 4

# உயர்பதவிகள் பல தருவாய் தாயே

**மூலம்**

மனிதரும், தேவரும், மாயா முனிவரும், வந்து, சென்னி
குனிதரும் சேவடிக் கோமளமே.கொன்றை வார்சடைமேல்
பனிதரும் திங்களும், பாம்பும்,பகீரதியும் படைத்த
புனிதரும் நீயும் என் புந்தி எந்நாளும் பொருந்துகவே.

**எளிய தமிழில்**

மனிதர் தொடங்கி தேவர் முனிவர் வரை
மேன்மையாய் உயர்த்திடு முன்சேவடி
சடை மதி சர்ப்பம் கங்கை சூடியவுன்
மணாளனுடன் அவன் மங்கை நீயும்
சதா யென் சிந்தை யுறைவாய்

5

## கனவில் உன்தரிசனம் கனிந்தருள் தாயே



**மூலம்**

பொருந்திய முப்புரை, செப்பு உரைசெய்யும் புணர் முலையாள்,
வருந்திய வஞ்சி மருங்குல் மனோன்மணி, வார் சடையோன்
அருந்திய நஞ்சு அமுது ஆக்கிய அம்பிகை, அம்புயமேல்
திருந்திய சுந்தரி, அந்தரி-பாதம் என் சென்னியதே.

**எளிய தமிழில்**

உறைவாய் ஒளியாய் முப்புர நாயகி
அமர்வாய் தாமரைமே லழகாய் நீயே
அருந்திய நஞ்சை அமுதாய் நிறுத்தியே
பரவெளி விரிந்த தேவியுன் பாதம்
பரவியதே பக்தனென் சிரம்மீதே

6

# மந்திர சித்தி அருள்வாய் தாயே

**மூலம்**

சென்னியது, உன் பொன் திருவடித் தாமரை. சிந்தையுள்ளே
மன்னியது, உன் திரு மந்திரம்,- சிந்துர வண்ணப் பெண்ணே.-
முன்னியநின் அடியாருடன் கூடி, முறை முறையே
பன்னியது, என்றும் உந்தன் பரமாகம பத்ததியே.

**எளிய தமிழில்**

சிரம்மீது நிறைந்தவுன் செம்பாதத் தாமரை
மனம்மீதும் வவ்வியதே மந்திரமாய்த் திருநாமம்
எவ்விடமும் த்யானிக்குமுன் அடியார் சகிதம்
என்மனமும் தோய்ந்ததே உன்நாம ஸாகரம்
எந்நாளும் சூடிடுவேனுன் திருவடித் தாமரை

7

# மலை போல் வரும் துன்பத்தைப் பனியாக்கி நீர்த்திடு தாயே



**மூலம்**

ததியுறு மத்தின் சுழலும் என் ஆவி, தளர்வு இலது ஓர்
கதியுறுவண்ணம் கருது கண்டாய்-கமலாலயனும்,
மதியுறுவேணி மகிழ்நனும், மாலும், வணங்கி, என்றும்
துதியுறு சேவடியாய். சிந்துரானன சுந்தரியே.

**எளிய தமிழில்**

தாமரை யுறை பிரம்மனும் மதிசடை
மணாளனும் மாலும் துதிக்குமுன் திருவடி
குங்குமத் திலகத் திருமுக அழகியே
தயிரிடை மத்தாய்த் தவித்துச் சுழலுமடியேன்
தளர்விலா நற்கதி தருவாய் தாயே

8

## பாசம்பல நீக்கித் துறவறம் அருள் தாயே

**மூலம்**

சுந்தரி எந்தை துணைவி, என் பாசத்தொடரை எல்லாம்
வந்து அரி சிந்துர வண்ணத்தினாள், மகிடன் தலைமேல்
அந்தரி, நீலி, அழியாத கன்னிகை, ஆரணத்தோன்
கம் தரி கைத்தலத்தாள்-மலர்த்தாள் என் கருத்தனவே

**எளிய தமிழில்**

தாயே பேரழகே எந்தை சிவன்தன் பாகமே
தடை யென்பாசத்தொட ரழித்தருள் தேவி
உடை த்தமகிடன் அகந்தை போலேயென்
கட்டறு அபயக் கரங்கொண்டு திருவே
கன்னியே உன் மலர்த்தாளே என் உள்ளங்கவர்வே

# ஸர்வ வஸியம் நினதருள் தாயே



**மூலம்**

கருத்தன எந்தைதன் கண்ணன,வண்ணக் கனகவெற்பின்
பெருத்தன, பால் அழும் பிள்ளைக்கு நல்கின, பேர் அருள்கூர்
திருத்தன பாரமும், ஆரமும், செங்கைச் சிலையும், அம்பும்,
முருத்தன மூரலும், நீயும், அம்மே. வந்து என்முன் நிற்கவே.

**எளிய தமிழில்**

உள்ளங்கவர்வே எந்தை சிவன் முன்தோன்றும்
ஞானசம்பந்தர்க்குப் பால் ஈந்த பெருத்தவுன்
கூர்திருத்தன பாரமும் முத்துமாலையும் செங்கை
தாங்குமுன் கரும்புவில்லும் புஷ்ப பாணங்களும்
வெண்மைச் சிரிப்புமென் முன்னால் தோன்றவே

10

# மோட்ச சாதனம் அருள்வாய் தாயே

**மூலம்**

நின்றும் இருந்தும் கிடந்தும் நடந்தும் நினைப்பது உன்னை,
என்றும் வணங்குவது உன் மலர்த் தாள்.-எழுதாமறையின்
ஒன்றும் அரும்பொருளே. அருளே. உமையே. இமயத்து
அன்றும் பிறந்தவளே. அழியா முத்தி ஆனந்தமே.

**எளிய தமிழில்**

தோன்றி அமர்ந்து சாய்ந்து நடந்தும் நினைவேன் உனையே
ஸாஸ்வத பேரின்ப நிலையே மோட்ச ஸ்தானமே
ஸக்தியே பிரணவமே அருளே உமையே உட்பொருளே
அவதரித்தாய் பார்வதியாய் இமயம்தோன்றி அன்று
ஆதரிப்பாய் ஏழையெனை வணங்குகிறேன் நின்பாதகமலம்

11

# இல்வாழ்க்கையில் இன்பம் அருள்வாய் தாயே



**மூலம்**

ஆனந்தமாய், என் அறிவாய், நிறைந்த அமுதமுமாய்,
வான் அந்தமான வடிவு உடையாள், மறை நான்கினுக்கும்
தான் அந்தமான, சரணாரவிந்தம்-தவள நிறக்
கானம் தம் ஆடரங்கு ஆம் எம்பிரான் முடிக் கண்ணியதே.

**எளிய தமிழில்**

நின்பாதகமலம் என்னுணர்வுநிறை அமுதக்கலம்
பஞ்சபூத வடிவுடையாள் ஸர்வ ஞான ஸ்வரூபி
அன்பே அருளே அறிவே ஆனந்தமே ஞானமே
வேதத்துவக்கமே வேதமுடிவே வளமாயுன்திருவடி
வெண்காடு நடமிடுமீசன் சிரம் வேயுமே திருமாலையாய்

## 12

# த்யான இன்பம் நிலையாய் அருள்வாய் தாயே

**மூலம்**

கண்ணியது உன் புகழ், கற்பது உன் நாமம், கசிந்து பக்தி
பண்ணியது உன் இரு பாதாம்புயத்தில், பகல் இரவா
நண்ணியது உன்னை நயந்தோர் அவையத்து-நான் முன்செய்த
புண்ணியம் ஏது? என் அம்மே. புவி ஏழையும் பூத்தவளே.

**எளிய தமிழில்**

திருமாலையாய் மணங்கமழ என் நாபாடுவதுன் புகழே
ஏழுலகக்கும் தாயே எனைப் படைத்த அன்னையே
நினைப்பேனுன் புகழ் கற்பேன் உன்நாமம் கசிவேனுன் நினைவில்
அரிய உனை நானறிய என்செய்தேன் தவம் நானறியேன்
புண்ணியம் பல புரிந்தே உனை நயந்தேனோ

13

# வைராக்ய பலம் அருள்வாய் தாயே



**மூலம்**

பூத்தவளே, புவனம் பதினான்கையும். பூத்தவண்ணம்
காத்தவளே. பின் கரந்தவளே. கறைக்கண்டனுக்கு
மூத்தவளே. என்றும்மூவா முகுந்தற்கு இளையவளே.
மாத்தவளே. உன்னை அன்றி மற்று ஓர் தெய்வம் வந்திப்பதே?

**எளிய தமிழில்**

நயந்தேனே உலகடக்கிய உத்தமியேயென் உறுதுணையே
ஈன்றவளே ஈன்றவண்ணம் காப்பவளே மறைப்பவளே
ஈசனுக்கு மூத்தவளே முகுந்தனுக்கு மூவா இளையவளே
அருந்தவத் தலைவியே அபிராமி அன்னையே அழகே
உனையன்றி வேறுதெய்வம் நயப்பேனோ

14

# தலைமை பெற அருள்வாய் தாயே

**மூலம்**

வந்திப்பவர் உன்னை, வானவர் தானவர் ஆனவர்கள்,
சிந்திப்பவர், நல்திசைமுகர் நாரணர், சிந்தையுள்ளே
பந்திப்பவர், அழியாப் பரமானந்தர், பாரில் உன்னைச்
சந்திப்பவர்க்கு எளிதாம் எம்பிராட்டி. நின் தண்ணளியே

**எளிய தமிழில்**

நயப்பேனே தேவியுன் தன்மை வியத்தகு கருணை
நான்முக பிரம்மனும் பாற்கடல் விஷ்ணுவுமுனை சிந்திப்பர்
பரமானந்த ஸ்வரூபி பரமசிவன் அன்பாலுனை பந்திப்பார்
பாரிலுனை தரிசிப்பவருக்கு நீயளிக்கும் சித்தி இனிதாம்
பரமேஸ்வரியே உளங் குளிர் திருவருளே

**15**

# பெருஞ்செல்வமும் பேரின்பமும் அருள்வாய் தாயே



**மூலம்**

தண்ணளிக்கு என்று, முன்னே பல கோடி தவங்கள் செய்வார்,
மண் அளிக்கும் செல்வமோ பெறுவார்? மதி வானவர் தம்
விண் அளிக்கும் செல்வமும் அழியா முத்தி வீடும், அன்றோ?-
பண் அளிக்கும் சொல் பரிமள யாமளைப் பைங்கிளியே.

**எளிய தமிழில்**

திருவருளே இனிய சொல் பசுங்கிளி இன்னிசை விருந்தே
திருவருள் நாடியுனைப் பாட மண்ணளிக்கும் செல்வமும்
இந்திராதி தேவர்தம் ஸ்வர்க்க லோகச் செல்வம்பலவும்
விண்ணளிக்கும் சங்கநிதி பதுமநிதி கற்பகவ்ருக்ஷமும்கூடும்
அழியாப் பிறப்பொடு சாயுஜ்ய பதவியளிப்பாயே பைங்கிளியே

16

# முக்கால உணர்வும் அருள்வாய் தாயே

**மூலம்**

கிளியே, கிளைஞர் மனத்தே கிடந்து கிளர்ந்து ஒளிரும்
ஒளியே, ஒளிரும் ஒளிக்கு இடமே, எண்ணில் ஒன்றும் இல்லா
வெளியே, வெளி முதல் பூதங்கள் ஆகி விரிந்த அம்மே.-
அளியேன் அறிவு அளவிற்கு அளவானது அதிசயமே.

**எளிய தமிழில்**

பைங் கிளியே பசுந்திரு மேனியே அன்பருள்ளம் பொங்கி
வளர் ஒளியே ஒளிக்கெல்லாம் மூல ஒளியே ஆதாரமே
பர வெளி இருந்தும் பரந்தும் கடந்தும் ஈடிணையிலா ப்ரகாசமே
தத்துவ ஒளி யாயொளிர்ந்தும் தத்துவமனைத்தும் கடந்த தாயே
இவ் வெளியேனின் சிந்தனைக்கு மெட்டும் அரிய அதிசயமே

17

# கன்னிப் பெண்களுக்கு நல்வாழ்வருள் தாயே



**மூலம்**

அதிசயம் ஆன வடிவு உடையாள், அரவிந்தம் எல்லாம்
துதி சய ஆனன சுந்தரவல்லி, துணை இரதி
பதி சயமானது அபசயம் ஆக, முன் பார்த்தவர்தம்
மதி சயம் ஆக அன்றோ, வாம பாகத்தை வவ்வியதே?

**எளிய தமிழில்**

அதிசயமே அத்புத வடிவே அழகே ஆனந்தத் திருவுருவே
அரவிந்த மெல்லாம் ஆராதிக்கும் அழகிய சிவக்கொடியே
அமுதமே அன்னையின் வாஞ்சையாய் ரதிபதிக் கருள
அன்று நெற்றிக்கண் கொண்டெரித்த மன்மதனை உயிர்ப்பித்து
அத்தனை அன்பினால் வென்று அவனி டப்பாகம் கொண்டவளே

18

# மரண பயம் நீக்கு தாயே

**மூலம்**

வவ்விய பாகத்து இறைவரும் நீயும் மகிழ்ந்திருக்கும்
செவ்வியும், உங்கள் திருமணக் கோலமும், சிந்தையுள்ளே
அவ்வியம் தீர்த்து என்னை ஆண்டபொற் பாதமும் ஆகிவந்து-
வெவ்விய காலன் என்மேல் வரும்போது-வெளி நிற்கவே.

**எளிய தமிழில்**

கொண்டவுன் சிவனுடன் இடமகலா இறைவி நீயும் மகிழும்
கருத்தி லொன்றிக் கல்யாண கோலம் களிப்பாய்த் தோன்றும்
கரும்பா யினிக்குமென் மனம் மகிழுமென் அகந்தை யழியும்
கண்ணார உமையொருபாகக் கோலத்தில் நீ கொடுக்கும் காட்சி
காலனெ ன்னுயிர் கொள்ளுங் காலமென் கண்முன் நிற்கவே

# 19

# பேரின்ப மருள் தாயே



**மூலம்**

வெளிநின்ற நின்திருமேனியைப் பார்த்து, என் விழியும் நெஞ்சும்
களிநின்ற வெள்ளம் கரைகண்டது, இல்லை, கருத்தினுள்ளே
தெளிநின்ற ஞானம் திகழ்கின்றது, என்ன திருவுளமோ?-
ஒளிநின்ற கோணங்கள் ஒன்பதும் மேவி உறைபவளே.

**எளிய தமிழில்**

நிற்கவே நிலைக்குதே யென்மனம் நின் மணக்கோலம்
பொற்கோலம் நின்னழகிய திருக்கோலம் ஆனந்த வெள்ளம்
சிற்பமாய் ஒளிகொண்டு உறைகின்ற நவ கோணம்
கற்குதே என்னுள்ளம் கருத்தாய்த் தெளிஞானம்
பொற்பாதமுந்தன் புறத்யானம் அகத்துள்ளே அகண்ட நின்தரிசனம்

## 20

# வீடு வாசல் செல்வங்கள் அருள் தாயே

**மூலம்**

உறைகின்ற நின் திருக்கோயில்-நின் கேள்வர் ஒரு பக்கமோ,
அறைகின்ற நான் மறையின் அடியோ முடியோ, அமுதம்
நிறைகின்ற வெண் திங்களோ, கஞ்சமோ, எந்தன் நெஞ்சகமோ,
மறைகின்ற வாரிதியோ?- பூரணாசல மங்கலையே.

**எளிய தமிழில்**

தரிசனம் இடப்பாகம் தாங்கியே மங்கலமாய் எந்தையுடன்
கரிசனமாய்க் காட்சி தரும் நால்வேத மூல ஓங்காரமோநீ
சரிசமமாய் நால்வேத முடிவின் முடியான உபநிஷதமோ
நிறையமுத நிலவின் பூரண வெண்மை மண்டலமோ
புரிசப்தம் பொருள்நிறை பாற்கடலோ என் நெஞ்சமோ

# அம்பிகையே என் அபசார தோஷம் நீக்கி யருள் தாயே




**மூலம்**

மங்கலை, செங்கலசம் முலையாள், மலையாள், வருணச்
சங்கு அலை செங்கைச் சகல கலாமயில் தாவு கங்கை
பொங்கு அலை தங்கும் புரிசடையோன் புடையாள், உடையாள்
பிங்கலை, நீலி, செய்யாள், வெளியாள், பசும் பெண்கொடியே.

**எளிய தமிழில்**

நெஞ்சம் விம்மும் செங்கலச தனங்கள் உடையவளே
கொஞ்சித்தாவும் கங்கை எழிலலையே உயர்மலை உதித்தவளே
கெஞ்சும் கடலலைச் சங்குவளையணிச் செங்கை கொண்டு
செஞ்சடை யானிடபாகம் சேர்ந்த மயில்சாயை சகலகலாவல்லியே
தஞ்சமென்றே யடைந்தேன் பசும் மென்கொடியே

## 22

# பிறவிப் பிணி தீர்த்தருள் தேவி

**மூலம்**

கொடியே, இளவஞ்சிக் கொம்பே, எனக்கு வம்பே பழுத்த
படியே மறையின் பரிமளமே, பனி மால் இமயப்
பிடியே, பிரமன் முதலாய தேவரைப் பெற்ற அம்மே.
அடியேன் இறந்து இங்கு இனிப் பிறவாமல் வந்து ஆண்டு கொள்ளே.

**எளிய தமிழில்**

மென்கொடியே வஞ்சி யிளம் பூங்கொம்பே பரிமளமே
என்கால முற்றுமுன்னே பக்குவக்கனி பழுக்க வைத்தபழமே
பெண்யானை உருவுலாவும் பனி இமயத் திருவே
எண்ணற்ற தேவர்தமை பிரம்மன் முதல்பெற்ற அன்னையே
என்னிப்பிறவி போதும் இனிப்பிறவாதே ஆட்கொள்வாய்

## 23

# மனச் சஞ்சலம் நீக்கி யருள்வாய் தேவி



**மூலம்**

கொள்ளேன், மனத்தில் நின் கோலம் அல்லாது, அன்பர் கூட்டந்தன்னை
விள்ளேன், பரசமயம் விரும்பேன், வியன் மூவுலகுக்கு
உள்ளே, அனைத்தினுக்கும் புறம்பே, உள்ளத்தே விளைந்த
கள்ளே, களிக்குங்களியே, அளிய என் கண்மணியே.

**எளிய தமிழில்**

கொள்ளேன் திருவாய் நின்னுருவன்றி வேறுருவம்
நினையேன் நின்தேஜோமய வடிவன்றி ஓர்வடிவம்
அடியேன் நின்சாக்தம் விட்டோர் மதம்விரும்பேன்
மண்விண் பாதாளம் உள்வெளி நிறைதாயே
என்மனம் களிகொள் ஆனந்தக் கண்மணியே

## 24

# தீரா நோய்தனை தீர்ப்பாய் தாயே

**மூலம்**

மணியே, மணியின் ஒளியே, ஒளிரும் மணி புனைந்த
அணியே, அணியும் அணிக்கு அழகே, அணுகாதவர்க்குப்
பிணியே, பிணிக்கு மருந்தே, அமரர் பெரு விருந்தே.-
பணியேன், ஒருவரை நின் பத்ம பாதம் பணிந்தபின்னே.

**எளிய தமிழில்**

கண்மணியே யென்கண்ணின் ஒளியே பொன்னேயென்
பொன்மணியே பொன்னுக் கழகூட்டும் அன்னையே
பிறவிப்பிணி தந்தருளிஅப் பிணிக்கு மருந்தாகும்
முக்திக்கனியே மருந்தே யென்தாயே தேவரமுதக்கனியே
பணியேனினி பிறரைநின் பாதம் பணிந்தபின்னே

## 25

# நினைத்த காரியம் நிறைவேற இடையூறு தகர்த் தருள்புரி தாயே



**மூலம்**

பின்னே திரிந்து, உன் அடியாரைப் பேணி, பிறப்பு அறுக்க,
முன்னே தவங்கள் முயன்று கொண்டேன்,- முதல் மூவருக்கும்
அன்னே. உலகுக்கு அபிராமி என்னும் அருமருந்தே.-
என்னே?-இனி உன்னை யான் மறவாமல் நின்று ஏத்துவனே

**எளிய தமிழில்**

பின் தொடர்வேனுன் பேரடியார் சகிதம்
முன் தவமூல முனையறிந்த நானே
என் பிறவிப்பிணி நீக்கு மருமருந்தே
தன் னொளி தந்துலகுய்விக்குந் தாயே
உன் புகழ்பாடி உன்மலர்பாதம் தொழுவேனே

## 26

# சொல்வாக்கும் செல்வாக்கும் தந்தருள்புரி தாயே

**மூலம்**

ஏத்தும் அடியவர், ஈரேழ் உலகினையும் படைத்தும்
காத்தும் அழித்தும் திரிபவராம்,- கமழ்பூங்கடம்பு
சாத்தும் குழல் அணங்கே.- மணம் நாறும் நின் தாளிணைக்கு என்
நாத் தங்கு புன்மொழி ஏறியவாறு, நகையுடைத்தே.

**எளிய தமிழில்**

தொழுதுனைப் பெருமையாய் சித்திபெற் றடியார் மூவர்
ஈரேழுலகும் படைத்துக் காத்து மழித்தருளி உலவ
கமழுமணங் கடம்பமலரணி கேசபார மணங்கே தாயே
மகிழுமணம் வீசும் நின்னெழில் பொற்பாத மதை
அமிழுமென் மனவார்த்தை நகைப்புக் குரித்ததே

## 27

# மனக் கிலேசம் நீக்கியருள் தாயே



**மூலம்**

உடைத்தனை வஞ்சப் பிறவியை, உள்ளம் உருகும் அன்பு
படைத்தனை, பத்ம பதயுகம் சூடும் பணி எனக்கே
அடைத்தனை, நெஞ்சத்து அழுக்கையெல்லாம் நின் அருட்புனலால்
துடைத்தனை,- சுந்தரி – நின் அருள் ஏதென்று சொல்லுவதே.

**எளிய தமிழில்**

உறித்தெ றிந்தாயென் ஆணவகன்ம மாயா ஜாலத்தை
நிறைத்தாய் கடலாய் பக்திக் கனலா யுன்நேசத்தை
துடைத்தாயென் உள்ளம் தூயவுன் அருள் வெள்ளத்தால்
அளித்தா யெனக்கே நின்தாமரை மலரடி சேவை
படைத்தா யென்வார்த்தை நின்புகழ் சொல்வதற்கே

## 28

# இக பர சுக மருள்தாயே

**மூலம்**

சொல்லும் பொருளும் என, நடம் ஆடும் துணைவருடன்
புல்லும் பரிமளப் பூங்கொடியே. நின் புதுமலர்த் தாள்
அல்லும் பகலும் தொழுமவர்க்கே அழியா அரசும்
செல்லும் தவநெறியும், சிவலோகமும் சித்திக்குமே.

**எளிய தமிழில்**

சொல்வதுவும் பொருள் கொள்வதுவும் நீக்கமற
இணைந்ததுவும் நீயே எந்தையுடன் நிலை பெறக்
கலந்ததுவும் அல்லும் பகலும் அடியார் நெஞ்சு
நிறைந்தவுன் செந்தாமரை பாதம் செல்வமும்
செறிந்த தவநெறியும் சிவபதமும் சித்திக்குமே

29

# அஷ்ட சித்தியு மருள் தாயே



**மூலம்**

சித்தியும் சித்தி தரும் தெய்வம் ஆகித் திகழும் பரா
சக்தியும், சக்தி தழைக்கும் சிவமும், தவம் முயல்வார்
முத்தியும், முத்திக்கு வித்தும், வித்து ஆகி முளைத்து எழுந்த
புத்தியும், புத்தியினுள்ளே புரக்கும் புரத்தை அன்றே.

**எளிய தமிழில்**

நீயேயன்றோ பாவியெனைத் தடுத் தாட்கொண்டாய்
நீயேயன்றோ நானினி கடல்வீழினு மாட்கொள்வாய்
நீயேயன்றோ இச்சை கொண்டு பல்லுருக் கொண்டாய்
நீயேயன்றோ யெனையினிக் கரையேற்றும் திருக்கொண்டாய்
நீயேயன்றோ ஒன்றேபலவே உருவேயருவேயென் உமையே

# 30

## ஆபத்து பலவும் நீக்கியருள் தாயே

**மூலம்**

அன்றே தடுத்து என்னை ஆண்டுகொண்டாய், கொண்டது அல்ல என்கை
நன்றே உனக்கு? இனி நான் என் செயினும் நடுக்கடலுள்
சென்றே விழினும், கரையேற்றுகை நின் திருவுளமோ.-
ஒன்றே, பல உருவே, அருவே, என் உமையவளே.

**எளிய தமிழில்**

உமையே ஒன்றியுன் வலமா யுன்னுறை சிவனுடன்
இமைக் கணமும் பிரியா அர்த்தநாரி உருவாய்நீ
எமைக் காத்துன் புகழ்பாட அருள்பாலிக்கு முன்முன்
அமையுறு தோள்மங்கை சுகம்வேண்டேன் மதம்வேண்டேன்
சுமைதரு மறுபிறவி வேண்டேன் வேண்டேன் ஆசையும்

31

# மறுமையிலு மின்ப மருள் தாயே



**மூலம்**

உமையும் உமையொருபாகனும், ஏக உருவில் வந்து இங்கு
எமையும் தமக்கு அன்பு செய்யவைத்தார், இனி எண்ணுதற்குச்
சமையங்களும் இல்லை, ஈன்றெடுப்பாள் ஒரு தாயும் இல்லை,
அமையும் அமையுறு தோளியர்மேல் வைத்த ஆசையுமே.

**எளிய தமிழில்**

உமையே ஒன்றியுன் வலமா யுன்னுறை சிவனுடன்
இமைக் கணமும் பிரியா அர்த்தநாரி உருவாய்நீ
எமைக் காத்துன் புகழ்பாட அருள்பாலிக்கு முன்முன்
அமையுறு தோள்மங்கை சுகம்வேண்டேன் மதம்வேண்டேன்
சுமைதரு மறுபிறவி வேண்டேன் வேண்டேன் ஆசையும்

32

## அகால, துர்மரணம் தவிர்த்தருள் தாயே

**மூலம்**

ஆசைக் கடலில் அகப்பட்டு, அருளற்ற அந்தகன் கைப்
பாசத்தில் அல்லற்பட இருந்தேனை, நின் பாதம் என்னும்
வாசக் கமலம் தலைமேல் வலிய வைத்து, ஆண்டு கொண்ட
நேசத்தை என் சொல்லுவேன்?- ஈசர் பாகத்து நேரிழையே.

**எளிய தமிழில்**

ஆசையலையில் உழன்று அந்தகன் கையில் சிக்குண்டு
மோசவலை நானே முழுதாய்ப் பின்னி மூடச்செயலாலே
பாசவலையில் துன்பமுற விருந்தயெனை நின்பாத
வாசத்தாமரையில் வசப்படுத்தி பேரொளியா யெனக்கருளி
காசினியில் நேசமாய்க் காத்தருளும் ஈசர்பாகத்து நேரிழையே

**33**

# மரண அவஸ்தையிலும் உன் நினைவேயருள் தாயே



**மூலம்**

இழைக்கும் வினைவழியே அடும் காலன், எனை நடுங்க
அழைக்கும் பொழுது வந்து, அஞ்சல் என்பாய். அத்தர் சித்தம் எல்லாம்
குழைக்கும் களபக் குவிமுலை யாமளைக் கோமளமே.
உழைக்கும் பொழுது, உன்னையே அன்னையே என்பன் ஓடிவந்தே

**எளிய தமிழில்**

இழைக்கும் வினைமூலம் காலனெனை அணுகி
அழைக்குங் காலம் என்னன்னை உனையேநான்
விழைவேனே அபயந்தருவா யுன்காலடித் தாமரையில்
குழையுமுன் சந்தனக் குவிமுலையி லுருகுமெந்தை
விழையும் கோமளவல்லித் தாயேயுனக்கே வந்தனம்

34

# பயிர்செழி நிலபுலன் அருள் தாயே

**மூலம்**

வந்தே சரணம் புகும் அடியாருக்கு, வானுலகம்
தந்தே பரிவொடு தான் போய் இருக்கும்–சதுர்முகமும்,
பைந் தேன் அலங்கல் பரு மணி ஆகமும், பாகமும், பொற்
செந் தேன் மலரும், அலர் கதிர் ஞாயிறும், திங்களுமே.

**எளிய தமிழில்**

வந்து சரணம் புகுமுன் அடியார்க்கு முக்தியை
ஈந்து பரிவுடன் பிரம்மனின் நால் முகத்திலும்
சிந்து தேன்மலர் மாலையணி மால் மார்பிலும்
இடம் கொண்ட சிவனுடை தேகத்திலும் விரிகிரண
சூரிய சந்திர மண்டலமு முறைந்தே அருள்வாய்

35

# திருமணம் இனிதே நிறைவேற அருள் தாயே



**மூலம்**

திங்கட் பகவின் மணம் நாறும் சீறடி சென்னி வைக்க
எங்கட்கு ஒரு தவம் எய்தியவா, எண் இறந்த விண்ணோர்–
தங்கட்கும் இந்தத் தவம் எய்துமோ?- தரங்கக் கடலுள்
வெங் கண் பணி அணைமேல் துயில்கூரும் விழுப்பொருளே.

**எளிய தமிழில்**

அருளும் நின்திருவடி எந்தை திருமுடி மதிமணம்
தவமாய் எம்மடியார்தலை நின் பாதம் வைத்தருள
யாவரும் வியப்புறும் வானவரும் எண்ணிறந்த
தேவரும் வியப்பர் இத்தவம் அவர்க்கும் கிட்டுமோயென
பாற்கடல் பாம்பணை துயில் பரம்பொருளே

## 36

# தொல்வினைகள் தொலைய அருள்புரி தாயே

**மூலம்**

பொருளே, பொருள் முடிக்கும் போகமே, அரும் போகம் செய்யும்
மருளே, மருளில் வரும் தெருளே, என் மனத்து வஞ்சத்து
இருள் ஏதும் இன்றி ஒளி வெளி ஆகி இருக்கும் உன்தன்
அருள் ஏது.- அறிகின்றிலேன், அம்புயாதனத்து அம்பிகையே.

**எளிய தமிழில்**

பொருளே பொருள்பல தரும் ஐஸ்வர்ய ரூபிணியே
பொருள் தரும் போகமும் நீயே போக மாயைநீக்கும்
அருள் நீயே சுகித்த மாயை நீக்கித் தெளிவளித்து
இருள் நீக்கி ஞான ஒளி வீசும் பேரருள் சக்தியும் நீயே
திருவா யுனதருள் எத்துணை வியக்கின்றேன் அபிராமியே

37

# நவரத்ன ப்ராப்தி அருள்புரி தாயே



**மூலம்**

கைக்கே அணிவது கன்னலும் பூவும், கமலம் அன்ன
மெய்க்கே அணிவது வெண் முத்துமாலை, விட அரவின்
பைக்கே அணிவது பண்மணிக் கோவையும், பட்டும், எட்டுத்
திக்கே அணியும் திரு உடையானிடம் சேர்பவளே.

**எளிய தமிழில்**

அபிராமி யுன் கையணிகலன் கரும்பு வில்லும் மலரம்பும்
அணிகலன் திருமேனியதில் பூணும் வெண் முத்து மாலையாம்
நச்சுப் பாம்பின் படமாய் ரகசியதானமதில் பன்மணி ஆபரணப்பட்டாம்
எண்திசையு மாடையாய்ப் போர்த்த சகல செல்வ திகம்பரனாம்
எந்தையுடன் பொருந்திய என்னம்மே உன்திருவடி சேர்வேனே

38

## விரும்பிய பொருள் விரும்பியவாறே அருள்புரி தாயே

**மூலம்**

பவளக் கொடியில் பழுத்த செவ்வாயும், பனிமுறுவல்
தவளத் திரு நகையும் துணையா, எங்கள் சங்கரனைத்
துவளப் பொருது, துடியிடை சாய்க்கும் துணை முலையாள்–
அவளைப் பணிமின் கண்டீர், அமராவதி ஆளுகைக்கே.

**எளிய தமிழில்**

சேர்வேனே உன்பாதம் அடைக்கலமா யன்பாலே
பவளக்கொடி சிறந்த செவ்வாயுன் குளிர்த் திருநகையும்
துடியிடை சாய்க்கும் அழகிய பெருதனங் கொண்டவளே
எந்தை சங்கரன் குழைய வலியணை இன்பத் துணையே
பணிவேனுனை ஸ்வர்க்க ஸாம்ராஜ்ய போகம் ஆள்வதற்கே

**39**

# அபிராமியை அண்டுபவர்க்கு அருளுண்டு



**மூலம்**

ஆளுகைக்கு, உன்தன் அடித்தாமரைகள் உண்டு, அந்தகன்பால்
மீளுகைக்கு, உன்தன் விழியின் கடை உண்டு, மேல் இவற்றின்
மூளுகைக்கு, என் குறை, நின் குறையே அன்று,-முப்புரங்கள்.
மாளுகைக்கு, அம்பு தொடுத்த வில்லான், பங்கில் வாணுதலே.

**எளிய தமிழில்**

ஆள்வதெனை நின் திருவடித் தாமரை காலனிடம்
மீள்வதுநான் உன் கடைக்கண் பார்வையால் உனை
முயலாத தென்குறையே நின்குறையன்று தாயே
திருமாலை யம்பாய் மேருதனை வில்லாய் முப்புரமெரித்த
சிவனிடப் பாகமுறை சிவசக்தி ஒளியே

40

# பூர்வ புண்ணியம் தடையின்றி பயன்தர அருள் தாயே

**மூலம்**

வாள்-நுதல் கண்ணியை, விண்ணவர் யாவரும் வந்து இறைஞ்சிப்
பேணுதற்கு எண்ணிய எம்பெருமாட்டியை, பேதை நெஞ்சில்
காணுதற்கு அண்ணியள் அல்லாத கன்னியை, காணும்–அன்பு
பூணுதற்கு எண்ணிய எண்ணம் அன்றோ, முன் செய் புண்ணியமே.

**எளிய தமிழில்**

ஒளியாய் நெற்றி திகழ் ஞானக் கண்ணே வுனைப்
பணிவாய் தேவரு மூவரும் விரும்பித் தொழ அன்பாய்
அரிதாய்க் காணும் கன்னிகை யெம்பெருமாட்டி யுனை
பேதை யெனக்கே பெருந்தவப் பேறாய் நான் தொழ
எண்ணிய எண்ணமென் முன்செய் புண்ணியமே

41

## ஸத்ஸங்கம் தந்தருள் தாயே



**மூலம்**

புண்ணியம் செய்தனமே-மனமே.- புதுப் பூங் குவளைக்
கண்ணியும் செய்ய கணவரும் கூடி, நம் காரணத்தால்
நண்ணி இங்கே வந்து தம் அடியார்கள் நடு இருக்கப்
பண்ணி, நம் சென்னியின் மேல் பத்ம பாதம் பதித்திடவே.

**எளிய தமிழில்**

புண்ணியமே செய்தோமே புவியில் யாம் பூங்குவளைக்
கண்ணியவள் நீஎந்தை சிவனுடன் சேரநின்றெமை உய்விக்கப்
பண்ணியமை கண்டு பேருற்றோம் களிப்புற்றோம் எம்
சென்னிதனில் நின்பாதம் படிந்திட யாம் வினையற்றோமிதை
எண்ணியே எம்நெஞ்சிலுன் பேரருள் பதித்திட்டோம்

# உலக வசியம் அருள் புரி தாயே

**மூலம்**

இடங்கொண்டு விம்மி, இணைகொண்டு இறுகி, இளகி, முத்து
வடங்கொண்ட கொங்கை-மலைகொண்டு இறைவர் வலிய நெஞ்சை
நடங்கொண்ட கொள்கை நலம் கொண்ட நாயகி, நல் அரவின்
வடம் கொண்ட அல்குல் பணிமொழி–வேதப் பரிபுரையே.

**எளிய தமிழில்**

இடம் பரந்து ஒன்றோ டொன்றாய்ப் பருத்திறுகி
திடம் கொண்டு மெத்தெனவே குழைந்து முத்தார
வடம் அணிந்த பெருமலை தனங் கொண்டென்
திடம் பூண்ட எந்தை நெஞ்சசைத்து நல்லரவின்
படக் கடிதடம் வாய்மொழி வேதச் சிலம்பணிதேவியே

43

## தீமைகள் ஒழிய அருள் புரி தாயே



**மூலம்**

பரிபுரச் சீறடிப் பாசாங்குசை, பஞ்சபாணி, இன்சொல்
திரிபுர சுந்தரி, சிந்துர மேனியள் தீமை நெஞ்சில்
புரிபுர, வஞ்சரை அஞ்சக் குனி பொருப்புச்சிலைக் கை,
எரி புரை மேனி, இறைவர் செம்பாகத்து இருந்தவளே.

**எளிய தமிழில்**

சிலம்பணி சீரிய சிறு திருவடி பாசாங்குசம் தாங்கி
பஞ்சபாணி தரிஇன்சொல் செம்மேனி திரிபுர சுந்தரி
தீமைபுரி உளங்கொள் தீயசுரர் அஞ்ச மேருமலை வளைத்
திருக்கரத்தான் தீத்தழல் திருமேனியன் எந்தை சிவனவன்
செம்பாகத்து எழுந்தருளுமென் அன்னையே அபிராமியே

44

# பேத புத்தி நீக்கி அருள் புரி தாயே

**மூலம்**

தவளே இவள், எங்கள் சங்கரனார் மனை மங்கலமாம்
அவளே, அவர்தமக்கு அன்னையும் ஆயினள், ஆகையினால்,
இவளே கடவுளர் யாவர்க்கும் மேலை இறைவியும் ஆம்,
துவளேன், இனி ஒரு தெய்வம் உண்டாக மெய்த் தொண்டு செய்தே.

**எளிய தமிழில்**

அன்னையே அபிராமியே எங்கள் சங்கரனார் மனைமங்கலமே
அன்னையும் நீயே எந்தைக்கு மானதனால் இறைக்கெல்லா மிறையென
உண்மையாய் நீயிருக்க உனக்கு மேலு மொருவருண்டோ
இறைவியுனக்குத் தொண்டு புரியு மருஞ்செயல் விட்டு நான்
ஏனையோருக்குச் செய்கிலேனோர் வழிபாடு

**45**

# உலக அபவாதம் நீக்கி அருள் புரி தாயே



**மூலம்**

தொண்டு செய்யாதுநின் பாதம் தொழாது, துணிந்து இச்சையே
பண்டு செய்தார் உளரோ, இலரோ? அப் பரிசு அடியேன்
கண்டு செய்தால் அது கைதவமோ, அன்றிச் செய்தவமோ?
மிண்டு செய்தாலும் பொறுக்கை நன்றே, பின் வெறுக்கை அன்றே.

**எளிய தமிழில்**

வழிபடாதுனை முறையாய் வணங்காதுன் திருவடிதனை சதாசர்வம்
தவத்துணையால் சமாதிநிலை முக்தர்செய் சதாகால வழிபாடாய்
நினைந்துனை நடப்பதே சரியை செய்வதே கிரியை ஸ்வாஸமாய்
வாழ்ந்துனை நினை முக்தர்வழியே நான் செல்ல என்தரம் தள்ளாதே
உன்துணையே யென்கதியா யெண்ணுமெனை வெறுக்காதே

## 46

# நடத்தை தோஷங்கள் நீக்கி அருள் புரி தாயே

**மூலம்**

வெறுக்கும் தகைமைகள் செய்யினும், தம் அடியாரை மிக்கோர்
பொறுக்கும் தகைமை புதியது அன்றே,-புது நஞ்சை உண்டு
கறுக்கும் திருமிடற்றான் இடப்பாகம் கலந்த பொன்னே.-
மறுக்கும் தகைமைகள் செய்யினும், யானுன்னை வாழ்த்துவனே.

**எளிய தமிழில்**

வெறுக்கும் செயல்பல செயினும் தன்னடியாரைப் பெரியோர்
பொறுக்கும் தன்மை வழக்கமானதொரு யியல்பன்றோ
கறுக்கும் திருக்கழுத்தா னிடபபாகம் பொருந்திய பொன்னே
மறுக்கும் செயல்நான் செயினுமெனை வெறுக்காதே நீவெறுப்பினும்
விரும்புமென் மனமுன்னையே நான்புகழ்ந்தே வாழ்த்துவனே

**47**

# யோக சித்தி பெற அருள் புரி தாயே



**மூலம்**

வாழும்படி ஒன்று கண்டு கொண்டேன், மனத்தே ஒருவர்
வீழும்படி அன்று, விள்ளும்படி அன்று, வேலை நிலம்
ஏழும் பரு வரை எட்டும், எட்டாமல் இரவு பகல்
சூழும் சுடர்க்கு நடுவே கிடந்து சுடர்கின்றதே.

**எளிய தமிழில்**

வாழும்வழி ஒன்று கண்டுகொண்டேன் மனதிலதே
நினையவு மியலா சொல்லவு மியலாப் பேரின்பமாய்
ஏழுலகும் எண்மலையும் எட்டவொண்ணாத் தொலைவுப்
பெருஞ்சுடராய் சூரிய சந்திர நடுத்திகழ்ப் பேரொளியாய்
பேரானந்தமாய்க் கண்டேனே உன் சுடரொளியை

48

## சரீரப் பற்று நீக்கி அருள் புரி தாயே

**மூலம்**

சுடரும் கலைமதி துன்றும் சடைமுடிக் குன்றில் ஒன்றிப்
படரும் பரிமளப் பச்சைக் கொடியைப் பதித்து நெஞ்சில்
இடரும் தவிர்த்து இமைப்போது இருப்பார், பின்னும் ஏய்துவரோ-
குடரும் கொழுவும் குருதியும் தோயும் குரம்பையிலே.

**எளிய தமிழில்**

சுடரா யொளிரும் பூரண சந்திர மண்டலமுறை
நிலவும் பிரணவமா யெந்தை சதாசிவன் முடி
படரும் கொன்றை ரூப ஞான மணப் பசுங்கொடியே
இடர றுத்துய்விக்குமுனை நொடியேனும் நினைக்கு
மெமக்கே தீருமே கருவறைப் பிணியே

49

# மரண அவஸ்தை நீக்கி அருள் புரி தாயே



**மூலம்**

குரம்பை அடுத்து குடிபுக்க ஆவி, வெங் கூற்றுக்கு இட்ட
வரம்பை அடுத்து மறுகும் அப்போது, வளைக்கை அமைத்து,
அரம்பை அடுத்து அரிவையர் சூழ வந்து, அஞ்சல் என்பாய்–
நரம்பை அடுத்து இசை வடிவாய் நின்ற நாயகியே.

**எளிய தமிழில்**

கருவறைப் பிணியா யுடல் சிறைப்படு மென்னுயிர் காலன்
என்முறை விதி வரும்வரை சுழன்று தவித்தே மறுக வுன்
கைவளை முத்திரை யபயங் காட்டி அஞ்சேல் என்றே
அரம்பையர் பரிவாரஞ்சூழ வந்து காத்திடு கருணையாய்
யாழிசை மீட்டியே சிவசக்தி நாயகியே

**50**

# அம்பிகையே உன் நேரடி தரிசனம் அருள் புரி தாயே

**மூலம்**

நாயகி, நான்முகி, நாராயணி, கை நளின பஞ்ச
சாயகி, சாம்பவி, சங்கரி, சாமளை, சாதி நச்சு
வாய் அகி மாலினி, வாராகி, சூலினி, மாதங்கி என்று
ஆய கியாதியுடையாள் சரணம்-அரண் நமக்கே.

**எளிய தமிழில்**

நாயகியே, நால்முகவடிவே, நாராயணியே, ஐவகைமலரம்பு
தரிஒய்யாரியே, சம்புசக்தியே, சங்கரியே, கரும்பச்சை சியாமளியே
நச்செழிலுடை நாகபாணியே, துர்க்கைக்கு முதலாம் வாராகியே,
சூலமேந்தியவளே, மதங்கர் குல தேவி மாதங்கியே, பலகீர்த்தி
உடையவளே நின்பாத சரணங்கள் அரணாகும் எமக்கே

**51**

# மோஹம் நீக்கி அருள் புரி தாயே



**மூலம்**

அரணம் பொருள் என்று, அருள் ஒன்று இலாத அசுரர் தங்கள்
முரண் அன்று அழிய முனிந்த பெம்மானும், முகுந்தனுமே,
சரணம் சரணம் என நின்ற நாயகி தன் அடியார்,
மரணம் பிறவி இரண்டும் எய்தார், இந்த வையகத்தே.

**எளிய தமிழில்**

அரணே திரிபுர நிலையென்ற அசுரன் வலிமையழித்த
அரனும் அரியுமே நின் திருவடியே எமக்குப் புகலென்றே
தஞ்சம் தஞ்சமென்றே அடைக்கலம்புக சரணமளித்தடியார்
நெஞ்சம் நிறை யருள்புரி நிலையாய் நிற்குமெம் மன்னை
தொழுவார் ஜனன மரணம் எய்தார் இவ்வையகத்தே

52

# இம்மையில் பெருஞ்செல்வம் அருள் புரி தாயே

**மூலம்**

வையம், துரகம், மதகரி, மா மகுடம், சிவிகை
பெய்யும் கனகம், பெருவிலை ஆரம்,—பிறை முடித்த
ஐயன் திருமனையாள் அடித் தாமரைக்கு அன்பு முன்பு
செய்யும் தவமுடையார்க்கு உளவாகிய சின்னங்களே.

**எளிய தமிழில்**

வையகமுறை தேர் குதிரை மதயானை மாமகுடம் பல்லக்கு
பொழிதங்கம் பெருவிலை ஆரம் பிறை சூடிய ஐயனவன்
திருமனையாள் அபிராமி யுனைத் தொழுமடியார்க்கே முன்தவ
வினைப்பயனாய் விளைவதுவே இம்மைச் செல்வம் பலவும்
மறுமை வீடு பேறுமான செல்வச் சின்னங்களே

**53**

## மாயை அகல அருள் புரி தாயே



**மூலம்**

சின்னஞ் சிறிய மருங்கினில் சாத்திய செய்ய பட்டும்
பென்னம் பெரிய முலையும், முத்தாரமும், பிச்சி மொய்த்த
கன்னங்கரிய குழலும், கண் மூன்றும், கருத்தில் வைத்துத்
தன்னந்தனி இருப்பார்க்கு, இது போலும் தவம் இல்லையே.

**எளிய தமிழில்**

சின்னஞ் சிறிய நின் திரு இடை அணியும் சிவந்த பட்டாடையும்
பென்னம் பெரிய ஸ்தனபாரமணி முத்துமாலையும் பிச்சிப்பூ மொய்க்கும்
கன்னங் கரிய நின் கூந்தலையும் கண்மூன்றும் கருத்தில் இருத்தி
தன்னந் தனியே மனம் நிலையாய் நிறுத்தியுனைத் தவம் செய்யடியார்
எண்ணந் தனில் உனைப்போல் வேறு பெருந்தவம் இலையே

54

## கடன் தொல்லைகள் தீர அருள் புரி தாயே

**மூலம்**

இல்லாமை சொல்லி, ஒருவர் தம்பால் சென்று, இழிவுபட்டு
நில்லாமை நெஞ்சில் நினைகுவிரேல், நித்தம் நீடு தவம்
கல்லாமை கற்ற கயவர் தம்பால் ஒரு காலத்திலும்
செல்லாமை வைத்த திரிபுரை பாதங்கள் சேர்மின்களே.

**எளிய தமிழில்**

இலை யென் றொருவரை யண்டி அவமான வறுமை
நிலை அண்டாது இருநிலை நெஞ்சில் கருதவே
சிலை யழகுத் திருவடி திரிபுர சுந்தரி யவள் சரணம்
கலை யாய்நினை இருத்தியே வறுமை யகற்றிக் கயவர்தீ
அலை யற்று அமை சரணம் ஒளி மின்னலாய்

**55**

# விருப்பு வெறுப்பற்ற மோன நிலை அருள் புரி தாயே



**மூலம்**

மின் ஆயிரம் ஒரு மெய் வடிவு ஆகி விளங்குகின்றது
அன்னாள், அகம் மகிழ் ஆனந்தவல்லி, அருமறைக்கு
முன்னாய், நடு எங்கும் ஆய், முடிவு ஆய முதல்விதன்னை
உன்னாது ஒழியினும், உன்னினும், வேண்டுவது ஒன்று இல்லையே.

**எளிய தமிழில்**

மின்னல் ஆயிரம் துலங்கொளி நின்திரு மெய்யாய்த் திகழ்
கன்னல் மொழியுடையாள் அகமகிழ் ஆனந்தவல்லி நின்பதமே
முன்னதாய் நடுவாய் எங்கணுமாய் முடிவாய்ப் பரவிப் பரந்து
வேதமதன் வேராய்த் தண்டாய்க் கிளையாய் யாதுமாகிநின்ற
உன்பதம் நான்தொழு தொன்று உனக்கா வதில்லையே

## 56

# வசீகர ஆற்றல் தந்தருள் புரி தாயே

**மூலம்**

ஒன்றாய் அரும்பி, பலவாய் விரிந்து, இவ் உலகு எங்குமாய்
நின்றாள், அனைத்தையும் நீங்கி நிற்பாள்—என்றன், நெஞ்சினுள்ளே
பொன்றாது நின்று புரிகின்றவா. இப் பொருள் அறிவார்—
அன்று ஆலிலையில் துயின்ற பெம்மானும், என் ஐயனுமே.

**எளிய தமிழில்**

இலை ஒரு நிலை விரிசக்திபுரி யாவுங் கடந்துநின்ற அந்தர்யாமிநீ
அலை யன்பாய் எளியேன் நெஞ்சில் மறையா நிலை கொண்டே
மலை யுறுதி மாண்பாய் மன நெகிழ்வாய் மாட்சிமை தந்தாய்
நிலை குலையேன் நின்பாதம் நெஞ்சில் வைத்தே மகிழ்வேன்
இலை துயில் பெம்மானும் அறிவரே இப்பொருள் என் ஐயனுமே

## 57

# வறுமை ஒழித்தருள் தாயே



**மூலம்**

ஐயன் அளந்தபடி இரு நாழி கொண்டு, அண்டம் எல்லாம்
உய்ய அறம் செயும் உன்னையும் போற்றி, ஒருவர் தம்பால்
செய்ய பசுந்தமிழ்ப் பாமாலையும் கொண்டு சென்று, பொய்யும்
மெய்யும் இயம்பவைத்தாய்: இதுவோ, உன்தன் மெய்யருளே?

**எளிய தமிழில்**

ஐயன் அளந்தளித்த இரு படி நெல்லால் அவனிப் பசிதீர்த்து
அறஞ் செய் அன்னையுனை பாமாலை பாடிப் புகழ வைத்தாய்
அருளிய தமிழ்மாலை கொண்டே மெய்பொய் கலந்தே நரனுக்கும்
இசைக்க வைத்த வுன்செயல் நின்னருளுக்குத் தான் அழகோ
துதியுனக்கே யன்றி நரருக்கன்றே யுன் அருளால்

# மன அமைதி தந்தருள் தாயே

**மூலம்**

அருணாம்புயத்தும், என் சித்தாம்புயத்தும் அமர்ந்திருக்கும்
தருணாம்புயமுலைத் தையல் நல்லாள், தகை சேர் நயனக்
கருணாம்புயமும், வதனாம்புயமும், கராம்புயமும்,
சரணாம்புயமும், அல்லால் கண்டிலேன், ஒரு தஞ்சமுமே.

**எளிய தமிழில்**

அருள்பொழி செந்தாமரை யொக்கயென் உளத்தாமரை எழுந்தருளி
அழகுமுலைச் சிறுதாமரை மொட்டாய் ஒளிர் பாலையே அபிராமியே
அன்புவிழிக் கருணை மொழித் திருமுகத் தாமரையே திருக்கரமும்நின்
திருவடித் தாமரைப் புகலிடம் கொண்டே பேரெழில் பொங்கி மணக்கும்
தாமரைக் காடு நினைந்தே அடையேன் வேறொரு தஞ்சம்

59

## குழந்தைகள் நடத்தை சீர் செய் தாயே



**மூலம்**

தஞ்சம் பிறிது இல்லை ஈது அல்லது, என்று உன் தவநெறிக்கே
நெஞ்சம் பயில நினைக்கின்றிலேன், ஒற்றை நீள்சிலையும்
அஞ்சு அம்பும் இக்கு அலராகி நின்றாய்: அறியார் எனினும்
பஞ்சு அஞ்சு மெல் அடியார், அடியார் பெற்ற பாலரையே.

**எளிய தமிழில்**

தஞ்சம் பிறிதொரு யிடமில்லை உனை வழிபடும் தவநிலையே
நெஞ்சம் கோர்க்க முயன்றிலேன் நானும் நின் தவநிலைக்கே
நீள்வில்லும் ஐந்தம்பு கரும்புசகித மலராய்க் கரங்கொள் அபிராமியே
தஞ்சமே நீயென்றறிந்துமே உன்தவ வழி நடையே நினைக்கின்றிலேன்
பஞ்சுமே நோகுமேன்றே பதமாய் அடிவைக்கும் தாய்நீபெற்ற பாலன் நான்

## 60

# மெய்யுணர்வு அருள் தாயே

**மூலம்**

பாலினும் சொல் இனியாய். பனி மா மலர்ப் பாதம் வைக்க–
மாலினும், தேவர் வணங்க நின்றோன் கொன்றை வார் சடையின்
மேலினும், கீழ்நின்று வேதங்கள் பாடும் மெய்ப் பீடம் ஒரு
நாலினும், சால நன்றோ–அடியேன் முடை நாய்த் தலையே?

**எளிய தமிழில்**

பாலுமுன் சொல்முன் இனிக்குமோ இன்சொல் உடையவளே
சென்னியென் மேல் வைத்த அபரிமித அன்புக் கருணை மிருதுவாய்
பாதமுன் குளிர்தாமரை அடி தொழ அயனும் மாலும் தேவர்தொழும்
எம்பிரான் கொன்றைச் சடை முடியினும் தாழ்தளம் நின்று தொழும்
பிரணவப் பீடம் நான்கினும் பெரிதோ அடியேனின் நாய்த்தலையும்

61

## மாயை யகற்றி உண்மை உணர்வு அருள் தாயே



**மூலம்**

நாயேனையும் இங்கு ஒரு பொருளாக நயந்து வந்து,
நீயே நினைவின்றி ஆண்டு கொண்டாய், நின்னை உள்ளவண்ணம்
பேயேன் அறியும் அறிவு தந்தாய், என்ன பேறு பெற்றேன்.—
தாயே, மலைமகளே, செங்கண் மால் திருத் தங்கைச்சியே.

**எளிய தமிழில்**

நாயேனையு மொரு பொருட்டாய் நயந்தே நின்னருளுக்குப்
பொருளாய்த் திருவுள்ளங் கொண்டே வலியவே நீயுமெனையென்
நினைவின்றியே ஆட்கொண்டாய் உன்னை உள்ளபடியே அறிய
பேதையெனக்குமே அறியு மறிவு தந்தாய் என்ன பேறு பெற்றேன்
தாயே மலையரசியே தாமரைக்கண் திருமாலின் அழகுத் தங்கையே

## 62

# அனைத்து வித அச்சமு மகல அருள் தாயே

**மூலம்**

தங்கச் சிலை கொண்டு, தானவர் முப்புரம் சாய்த்து, மத
வெங் கண் கரி உரி போர்த்த செஞ்சேவகன் மெய்யடையக்
கொங்கைக் குரும்பைக் குறியிட்ட நாயகி, கோகனகச்
செங் கைக் கரும்பும், மலரும், எப்போதும் என் சிந்தையதே.

**எளிய தமிழில்**

தங்க மய மேருதனை வில்லாய்த் தரித்து அசுரர் முப்புர மெரித்து
வெங்கண் மத யானை தோலுரித்துப் போர்த்திய சிவந்த எந்தை
சிவனவன் திருமேனி குறிகொண்டதே அம்மே உன் நகில்குரும்பே
அன்னையுன் செந்திருக் கரமேந்திய கரும்புவில்லும் மலரம்பும்
இத்துணையாவுமே செறிந்தே வசிக்கு மென் சிந்தையிலே

63

# நல்லறிவு தோன்ற அருள் தாயே



**மூலம்**

தேறும்படி சில ஏதுவும் காட்டி, முன் செல்கதிக்குக்
கூறும் பொருள், குன்றில் கொட்டும் தறி குறிக்கும்–சமயம்
ஆறும் தலைவி இவளாய் இருப்பது அறிந்திருந்தும்,
வேறும் சமயம் உண்டு என்று கொண்டாடிய வீணருக்கே.

**எளிய தமிழில்**

சிந்தையிலே காணாபத்யம் சைவம் சாக்தம் வைணவ கௌமார சௌர
சீரியதலை வியிவளே என்றறிந்தும் பிறிதொரு சமயம் பற்றும் அறிவிலிகாள்
அவர்தலை குன்றின்மேலடி மரக்கட்டையடி வியர்த்தமாம் அவருக் கறிவுரை
இவள்தலை வியே இவளன்றி யொருதலைவி யெவருமிலை யென்றே
என்தலை அபிராமியே உன்பாதம் வைத்தே னென்னன்பை உனக்கே

64

## பக்தி பெருக அருள் தாயே

**மூலம்**

வீணே பலி கவர் தெய்வங்கள்பால் சென்று, மிக்க அன்பு
பூணேன், உனக்கு அன்பு பூண்டுகொண்டேன், நின்புகழ்ச்சி அன்றிப்
பேணேன், ஒரு பொழுதும், திருமேனி ப்ரகாசம் அன்றிக்
காணேன், இரு நிலமும் திசை நான்கும் ககனமுமே.

**எளிய தமிழில்**

உனை விட்டு வீணே உயிர்ப்பலிகொள் பல தெய்வங்கள்பாற் சேரேன்
எனை யாளுமுன் அரும்புகழன்றி வேறொருவர் புகழ் சற்றும் விரும்பேன்
துணை யாய்ப் பாலூட்டுந் தாயாய் நீயிருக்க சேயாய் நானுனைப் பிரியேன்
இணை யுனக்குத்தான் இனி யொருவருண்டோ இனியவளே உயர்ந்தவளே
தனை யேயொளியாய் நிறைத்தாயே திசைநான்கும் மண்ணிலும் விண்ணிலும்

**65**

# புத்திர பாக்கியம் அருள் தாயே



**மூலம்**

ககனமும் வானும் புவனமும் காண, விற் காமன் அங்கம்
தகனம் முன் செய்த தவம்பெருமாற்கு, தடக்கையும் செம்
முகனும், முந்நான்கு இருமூன்று எனத் தோன்றிய மூதறிவின்
மகனும் உண்டாயது அன்றோ?—வல்லி. நீ செய்த வல்லபமே.

**எளிய தமிழில்**

மண்ணிலும் விண்ணிலும் தேவரும் மனிதரும் காண வில்தாங்கிய
மன்மதனவனை நெற்றிக்கண்கொண்டெறித்து தட்சிணாமூர்த்தியாகித்
தவம்புரி எந்தை சிவனிடம் பன்னிரு திருக்கரமும் சிவந்தஆறு
முகமண்டல ஜோதியா ய்மலர் ஞானஉரு குருபர ஷண்முகன்
உதித்தது மன்னையே அபிராமியே உன்னாற்றலே

66

## கவிபாடும் ஆற்றல் அருள் தாயே

**மூலம்**

வல்லபம் ஒன்று அறியேன், சிறியேன், நின் மலரடிச் செய்
பல்லவம் அல்லது பற்று ஒன்று இலேன், பசும் பொற் பொருப்பு–
வில்லவர் தம்முடன் வீற்றிருப்பாய். வினையேன் தொடுத்த
சொல் அவமாயினும், நின் திரு நாமங்கள் தோத்திரமே.

**எளிய தமிழில்**

உன்னாற்றல் யாதொன்று மறியேன் நான் சிறியேன் ஆயினும்
உன்செந்திருவடி தளிரன்றி வேறு பற்றொன்று இலேன் எந்தை
பொன்மயமேரு பசுமலைதனை வில்லாய்க் கொண்ட சிவனவன்
உடனமர் அபிராமி அன்னையே தீவினையுடை யடியேன் தொடுத்த
அந்தாதி பாமாலை பலவும் அவமாயினும் நின் திருநாமமே

## 67

# பகை அழித்து அருள் தாயே



**மூலம்**

தோத்திரம் செய்து, தொழுது, மின் போலும் நின் தோற்றம் ஒரு
மாத்திரைப் போதும் மனத்தில் வையாதவர்–வண்மை, குலம்,
கோத்திரம், கல்வி, குணம், குன்றி, நாளும் குடில்கள் தொறும்
பாத்திரம் கொண்டு பலிக்கு உழலாநிற்பர்–பார் எங்குமே.

**எளிய தமிழில்**

நின் திருநாமம் க்ஷணமேனும் வாயால் சொல்லி கையால் தொழுது
உன் நினைவு கொள்ளாதார் கொடைத்தன்மை குடிப்பிறப்பு கோத்திரம்
நல் கல்வி கேள்வி குணம் குன்றி பிக்ஷைப் பாத்திரமேந்தியே குடில்
பல உழன்றே வருந்துவரே அன்னையே சரியை அரும்பாய் கிரியை மலராய்
என் மனத்தே யோகம் காயாய் ஞானம் கனியாய் அருள்வாய் செல்வமே

68

# நிலம்,நீர்,வீடு,வாசல்,தோட்டம் அருள் தாயே

**மூலம்**

பாரும், புனலும், கனலும், வெங் காலும், படர் விசும்பும்,
ஊரும் முருகு சுவை ஒளி ஊறு ஒலி ஒன்றுபடச்
சேரும் தலைவி, சிவகாம சுந்தரி, சீறடிக்கே
சாரும் தவம், உடையார் படையாத தனம் இல்லையே.

**எளிய தமிழில்**

செல்வமாய் நிலமும் நீரும் நெருப்பும் வேகமாய்க் காற்றும்
பெரும்பரப்பாய் ஆகாசமும் இவையாவிலும் படர் மணமாய்
வியாபகமாய் சுவை ரஸம் பிரகாசம் ஸ்பர்சம் ஓசை இரண்டறக்
கலந்தொளிர் இன்புறு தேவியே பரமேஸ்வரியே சிவகாமசுந்தரியே
நின்திருவடிக் கண்ணே சார்ந்தேன் தனமே உனையே

## 69

# ஸகல ஸௌபாக்யங்களும் அருள் தாயே



**மூலம்**

தனம் தரும், கல்வி தரும், ஒருநாளும் தளர்வு அறியா
மனம் தரும், தெய்வ வடிவும் தரும், நெஞ்சில் வஞ்சம் இல்லா
இனம் தரும், நல்லன எல்லாம் தரும், அன்பர் என்பவர்க்கே–
கனம் தரும் பூங் குழலாள், அபிராமி, கடைக்கண்களே,

**எளிய தமிழில்**

தனம் தருவாய் தரமாய்க் கல்வி தருவாய் ஒருநாளும் தளர்வறியா
மனம் தருவாய் நெஞ்சில் வஞ்சமிலா நல்லுறவும் நட்பும் சுற்றமாய்ச்
சுகம் தருவாய் தெய்வீக அழகும் தருவாய் இவையும் தருவாய் நல்லவை
யாவும் தருவாய் இம்மையில் இன்ப வாழ்வும் மறுமையில் தேவயின்பமும்
யாவுமே நீதான் என்றுறையு மெனக்கே உன் கடைக் கண்களால்

70

## ஸங்கீத ஓவிய கலைவல்லமை அருள் தாயே

**மூலம்**

கண்களிக்கும்படி கண்டுகொண்டேன், கடம்பாடவியில் பண்
களிக்கும் குரல் வீணையும், கையும் பயோதரமும்,
மண் களிக்கும் பச்சை வண்ணமும் ஆகி, மதங்கர்க்குலப்
பெண்களில் தோன்றிய எம்பெருமாட்டிதன் பேரழகே.

**எளிய தமிழில்**

கண் கண்டு களித்தது கடம்ப வ்ருக்ஷ வனப் பேரழகில் உன்
பண் கேட்டு இனித்தது நின் வீணைத் திருக்கரமும் திருத்தனமும்
மண் வியக்கும் பசுமை நிறத்தழகியே ஷ்யாமளியே மதங்கர்
குல மாதரசியே எங்கும் காணக் கிட்டாப் பேரழகே உன்னுருவே
என் த்யானக் கருவாய் என்றும் விளங்கும் பேரெழிலே

71

## மனக்குறை தீர்த்து மகிழ்ச்சி அருள் தாயே



**மூலம்**

அழகுக்கு ஒருவரும் ஒவ்வாத வல்லி, அரு மறைகள்
பழகிச் சிவந்த பதாம்புயத்தாள், பனி மா மதியின்
குழவித் திருமுடிக் கோமளயாமளைக் கொம்பு இருக்க–
இழவுற்று நின்ற நெஞ்சே.-இரங்கேல், உனக்கு என் குறையே?

**எளிய தமிழில்**

பேரெழிலே உன்னழகுக்கு ஒப்பு ஒருவரற்ற ஒப்பற்ற வல்லிநீ
வேதங்களே உலவிப் பயிலுமுன் திருவடித்தாமரை செந்தாமரையே
குளிர்மதியே திருமுடி அணிப் பூங்கொம்பே இளமையழகே யாமளையே
வளர்மதியாய் நீயிருக்க வேண்டியதை நீகொடுக்க வளமாய் அடியேன்
என்கதிக்கே எக்காலமும் இனியேது குறை

72

## பிறவிப் பிணி தீர்த்தருள் தாயே

**மூலம்**

எங்குறை தீரநின்று ஏற்றுகின்றேன், இனி யான் பிறக்கில்,
நின் குறையே அன்றி யார் குறை காண்?-இரு நீள் விசும்பின்
மின் குறை காட்டி மெலிகின்ற நேர் இடை மெல்லியலாய்.-
தன் குறை தீர, எம்கோன் சடை மேல் வைத்த தாமரையே.

**எளிய தமிழில்**

இனிகுறை எனக்கேது யென்றேயுனை மனமாரத் துதித்தே தொழுகின்றேன்
உன்குறையே இனியாவும் ஒருகால் நானினிப் பிறந்தால் என்பிழை யன்றே
அகன்றுயர் வான்கண் மின்னலினு மொடுங்கிய திருவிடை மெல்லியலாளே
நின்நூடல் தீர்க்கவே எம்பிரான்தன் செஞ்சடை வைத் துதித்த நின்மலர்ச்
செம்பாதம் என்குறை தீர்க்கவே நெஞ்சாரத் துதிப்பேனே

73

## கர்ப்ப ப்ராப்தியருள் தாயே




**மூலம்**

தாமம் கடம்பு, படை பஞ்ச பாணம், தனுக் கரும்பு,
யாமம் வயிரவர் ஏத்தும் பொழுது, எமக்கு என்று வைத்த
சேமம் திருவடி, செங்கைகள் நான்கு, ஒளி செம்மை, அம்மை
நாமம் திரிபுரை, ஒன்றோடு இரண்டு நயனங்களே.

**எளிய தமிழில்**

உன்துதிக்காய் மணமிகு மலர்மாலை கடம்ப ஆரமே
உன்னாயுதம் ஐவகை மலரம்பு சகிதக் கரும்பு வில்லுமாம்
உனைத்துதி உயர்வாம் மந்திர சாதக காலமோ அர்த்த யாமம்
உய்வெமக்கே உன்திருவடியாம் நற்காப்பே நின்நாற்கரங்கள்
உயர்விக்கு முன்திருநாமம் திரிபுரசுந்தரியே ஒளியே முக்கண்ணாம்

# செய்தொழில் தலைசிறக்க அருள் தாயே

**மூலம்**

நயனங்கள் மூன்றுடை நாதனும், வேதமும், நாரணனும்,
அயனும் பரவும் அபிராம வல்லி அடி இணையைப்
பயன் என்று கொண்டவர், பாவையர் ஆடவும் பாடவும், பொன்
சயனம் பொருந்து தமனியக் காவினில் தங்குவரே.

**எளிய தமிழில்**

முக்கண்ணனாம் எந்தையும் அயனும் மாலும் வேதமும் போற்றிக்
கண்ணெனப் பணியுமென் அபிராமவல்லியவள் பொற் திருவடியே
முக்திப்பயனென த்யானிக்கு மடியார் நடன அரம்பையர் பாவையர்
பொன்மஞ்சமதில் ஆடல் பாடல் களியாட்டம்தான் பொருந்துவரோ
பொன்னிறக் கற்பகச் சோலைதான் இந்திரராய்த் தங்குவரோ

**75**

# விதியையும் வெல்ல வலிமை அருள் தாயே



**மூலம்**

தங்குவர், கற்பக தாருவின் நீழலில், தாயர் இன்றி
மங்குவர், மண்ணில் வழுவாய் பிறவியை,-மால் வரையும்,
பொங்கு உவர் ஆழியும், ஈரேழ் புவனமும், பூத்த உந்திக்
கொங்கு இவர் பூங்குழலாள் திருமேனி குறித்தவரே.

**எளிய தமிழில்**

தங்குவரோ இனியொரு தாய் வயிற்றில் உன்னுதரமுதித்த
ஈரேழு புவனம் எண்திசை பெருமலை எழுகடல் தியானிக்க
நறுமண பூங்குழல் பொருந்து முன்திரு வதனஎழில்தனை
மனமதில் பூஜிக்க அடியாருக் கொரு குறைதானுண்டோ
அவரெண்ணம் அபிராமி உன்திருவுருவங் குறித்தே

# உரிமைப் பொருள் நிலைத்து நிற்கவே அருள் தாயே

**மூலம்**

குறித்தேன் மனத்தில் நின் கோலம் எல்லாம், நின் குறிப்பு அறிந்து
மறித்தேன் மறலி வருகின்ற நேர்வழி, வண்டு கிண்டி
வெறித்தேன் அவிழ் கொன்றை வேணிப் பிரான் ஒரு கூற்றை, மெய்யில்
பறித்தே, குடிபுகுதும் பஞ்ச பாண பயிரவியே.

**எளிய தமிழில்**

குறித்தே னுந்திருக்கோலம் பாதாதிகேசமாய் எந்தை பரமனிடம்
பொருந்து முன்திருமேனி வண்ணமய வடிவுடை வாசஸ்தலமே
பதித்தே னென்மனம் வண்டுகிண்டி அவிழ் தேன்மலர் கொன்றைசடை
அடைத்தேன் காலன்வழி யுன் திருக்கோலத் திருவுளக் குறிப்பால்
சக்தியாய் சிவனுறை ஐவகை அம்புமலராயுத பைரவியே

# அச்சம் பகை நீக்கி அருள் தாயே



**மூலம்**

பயிரவி, பஞ்சமி, பாசாங்குசை, பஞ்ச பாணி, வஞ்சர்
உயிர் அவி உண்ணும் உயர் சண்டி, காளி, ஒளிரும் கலா
வயிரவி, மண்டலி, மாலினி, சூலி, வராகி–என்றே
செயிர் அவி நான்மறை சேர் திருநாமங்கள் செப்புவரே.

**எளிய தமிழில்**

பைரவசக்தியே சதாசிவசக்தியே பாசாங்குசம் தரிதேவி ஐமலரம்புடையாள்
வஞ்சர் உயிரவி சண்டிதேவி கரிய காளிதேவி ஒளிர்கலை வைரஆபரணமணிதேவி
குண்டலினிதேவி அக்ஷர மாலினி சூலினி வாராஹி நான்மறைசேர் திருநாமமாயிரம்
எண்ணிலடங்கா அடியார் நாவினிக்க மனம்செழிக்கச் செப்புவரே

78

## சகல செல்வங்களும் அருள் தாயே

**மூலம்**

செப்பும் கனக கலசமும் போலும் திருமுலைமேல்
அப்பும் களப அபிராம வல்லி, அணி தரளக்
கொப்பும், வயிரக் குழையும், விழியின் கொழுங்கடையும்,
துப்பும், நிலவும் எழுதிவைத்தேன், என் துணை விழிக்கே.

**எளிய தமிழில்**

செப்பும் தங்கக் கலசமும் பொருந்து முன்னழகுத் திருமுலைமேல்
சார்த்தும் நறுமண சந்தனக் கலவையும் நின்செவி அணி முத்துக்
கொப்பும் வைரத் தோடும் நின்விழி மதர்த்த மலர்ப் பார்வையும்
துப்பும் இதழில் துவளுமுன் வெண்ணிலவுப் புன்னகையும் என்மனக்
கோவிலில் ஓவியமாய்த் தீட்டினேன் என்விழியிலென்றும்

## 79

# பந்தங்களிலிருந்து விடுபட அருள் தாயே



**மூலம்**

விழிக்கே அருள் உண்டு, அபிராம வல்லிக்கு, வேதம் சொன்ன
வழிக்கே வழிபட நெஞ்சு உண்டு எமக்கு, அவ்வழி கிடக்க,
பழிக்கே சுழன்று, வெம் பாவங்களே செய்து, பாழ் நரகக்
குழிக்கே அழுந்தும் கயவர் தம்மோடு, என்ன கூட்டு இனியே?

**எளிய தமிழில்**

உன்விழி யிலென்று மெனக்கருளுண்டு வேத மார்க்கமாய் உனைப் பூஜிக்க
இன்வழி யாயெனக்கே மனமுண்டு இவ்வழி மார்க்கம் என்வழி நிறக்க
இழிவழி கீழ்க்கடை மனிதரோ டெனக்கென்ன கூட்டு இனிய அபிராமிவல்லியே
உன்மொழி பேசுவார் உன்நாமம் உருகுவார் உன்புகழ் பாடுவார் அவர்தம்
பெருவழியே என்னுயிர் வழிபடும் இனிய பெருவொளி சேர்க்கையே

*இப்பாடல் அபிராமி அந்தாதியின் மகுடம். இப்பாடல் பட்டர் *
பாடியவுடன் அன்னை தன் தாடங்கத்தால் நிலவு கொணர்ந்தாள்

## 80

# பெற்ற மகிழ்ச்சி நிலைத்திட அருள் தாயே

**மூலம்**

கூட்டியவா என்னைத் தன் அடியாரில், கொடிய வினை
ஓட்டியவா, என்கண் ஓடியவா, தன்னை உள்ளவண்ணம்
காட்டியவா, கண்ட கண்ணும் மனமும் களிக்கின்றவா,
ஆட்டியவா நடம்–ஆடகத் தாமரை ஆரணங்கே.

**எளிய தமிழில்**

ஒளிவழி வானில் துலங்குதே உன்தாடங்கம் விண்ணில்நீ வீசவே என்மனம்
பேரொளி சேர்க்கையாய்த் துலங்குதே அன்னையே உன் சிவசக்தி ரூபமே
பெருவழி பேரொளியாய்ப் பிணைத்தனையே யெனையுமுன் பக்தர் குழாம்
உன்னொளி அருள்வடிவு கண்டே கண்ணும் மனமும் கற்கண்டா யினிக்குதே
என்வழி கண்டுன் நடம் ஆடியென்வினை நீக்கிய தாமரை ஆரணங்கே *

*அன்னை நிலவு கொணர்ந்ததும் அபிராமி பட்டர் அருள்மழையில்
திளைத்துப் பாடிய அத்புதப் பாடல் இது

81

## நன்னடத்தை அருள் தாயே



**மூலம்**

அணங்கே.-அணங்குகள் நின் பரிவாரங்கள் ஆகையினால்,
வணங்கேன் ஒருவரை, வாழ்த்துகிலேன் நெஞ்சில், வஞ்சகரோடு
இணங்கேன், எனது உனது என்றிருப்பார் சிலர் யாவரொடும்
பிணங்கேன், அறிவு ஒன்று இலேன், என்கண் நீ வைத்தபேர் அளியே.

**எளிய தமிழில்**

ஆரணங்கே அபிராமி அணங்குகள் உன்னற்புதப் பரிவாரமாய்க் கண்ணாரக் கண்டபின்
வணங்கிடுவேனோ வேறெவரையும் வாழ்த்திடுவேனோ பிறிதொரு தெய்வம்
இணங்கிடுவேனோ தன்னலமே தலையாயக் குடி கொண்டோர்தமை
சுணங்கிடுவேனோ தன்னுடமை நின்னுடை அபிமானங் கொண்ட அடியார்தமை
உணர்ந்திடுவேனே அறிவற்ற நான் என்பால் நீகொண்ட கருணை.

## 82

# கவன சக்தி அருள் தாயே

**மூலம்**

அளி ஆர் கமலத்தில் ஆரணங்கே. அகிலாண்டமும் நின்
ஒளியாக நின்ற ஒளிர் திருமேனியை உள்ளுந்தொறும்,
களி ஆகி, அந்தக்கரணங்கள் விம்மி, கரைபுரண்டு
வெளியாய்விடின், எங்ஙனே மறப்பேன், நின் விரகினையே?

**எளிய தமிழில்**

கருணை வதனமே வண்டுமொய் தாமரையமர் அகிலாண்டப் பெரு ஒளியே
மனமதில் என் எண்ணமே பொன் வண்ணமே பெருமகிழ்வே அந்தக் கரணம்
விம்மியே மனம் புத்தி சித்த மஹங்காரம் உள்ளம்யாவுமே அழகாய் மலர்ந்து
பொங்கியே குணம் குறி காலம் நாம ரூபத் தத்துவக் கரையுடைத்தே பரவெளி
பரவியே வாக்குமனமிலா மனோலயம் தேக்கியே சிந்தை தெளிவித்தாயே.

## ஏவலர் பலர் அருள் தாயே



**மூலம்**

விரவும் புது மலர் இட்டு, நின் பாத விரைக்கமலம்
இரவும் பகலும் இறைஞ்ச வல்லார், இமையோர் எவரும்
பரவும் பதமும், அயிராவதமும், பகீரதியும்,
உரவும் குலிகமும், கற்பகக் காவும் உடையவரே.

**எளிய தமிழில்**

தாயே தன்னிகர் பக்திகமழ் மணம் விரவும் புதுமலரிட்டே நாளும் பொழுதும்
நின் நறுமணத் தாமரைத் திருவடி கைமலரர்ச்சிக்க வாயுன் திருநாமம் மொழிய
என் மனமுன் பொற்பாதமமிழ வாக்கு காயம் மனமெனும் முக்கரணமு முனைத்தொழ
இப் பிறவிபோய் தேவர்புகழ் பதவியும் ஐராவதமும் பகீரதியும் வஜ்ராயுதமும் கற்பகச்
சோலை கொண்ட இந்திரனாக்கிடுவாயே இனியவளே என்னின்முகத் தாயே

84

## சங்கடங்கள் தீர அருள் தாயே

**மூலம்**

உடையாளை, ஒல்கு செம்பட்டுடையாளை, ஒளிர்மதிச் செஞ்
சடையாளை, வஞ்சகர் நெஞ்சு அடையாளை, தயங்கு நுண்ணூல்
இடையாளை, எங்கள் பெம்மான் இடையாளை, இங்கு என்னை இனிப்
படையாளை, உங்களையும் படையாவண்ணம் பார்த்திருமே.

**எளிய தமிழில்**

இன்முகத்தாளே அண்டங்கள் அடியார்கள் யாவும் நின் உடைமையே அன்னையே
செம்பட்டாடை உடையணி ஒளிர் மதி செஞ்சடையாளே வஞ்சகர் நெஞ்சடையாளே
உடையானின் உடையாளே உய்வுறும் ஆன்மாக்களை உய்த்தேற்று முடையாளே
நூலினுமெல் லிடையாளே எந்தை யிடம்வவ்விடு இங்கெனை யினிப்படையாளே
இவ்வன்னையை உலகீரே பிறவாவரமேந்தக் கண்ணாரக் காண்பீரே

## 85

# துன்பங்கள் நீங்க அருள் தாயே



**மூலம்**

பார்க்கும் திசைதொறும் பாசாங்குசமும், பனிச் சிறை வண்டு
ஆர்க்கும் புதுமலர் ஐந்தும், கரும்பும், என் அல்லல் எல்லாம்
தீர்க்கும் திரிபுரையாள் திரு மேனியும், சிற்றிடையும்,
வார்க் குங்கும முலையும், முலைமேல் முத்து மாலையுமே.

**எளிய தமிழில்**

காணும் திசைதோறும் பின்னிரண்டுகை பாசமும் அங்குசமும்
பேணும் முன்னிரண்டுகை புதுமலர் ஐந்தும் கரும்பு வில்லும்
பூணும் கச்சையும் குங்குமக்குழம்பு பூசு நகில்களும் அவை
மேலணி முத்துமாலையும் மென்கொடி சிற்றிடையும்நான்
காணும் உன்னழகுத் திருமேனியும் என்துன்பம் துடைக்குமே

**86**

## ஆயுத பயம் நீங்க அருள் தாயே

**மூலம்**

மால் அயன் தேட, மறை தேட, வானவர் தேட நின்ற
காலையும், சூடகக் கையையும், கொண்டு—கதித்த கப்பு
வேலை வெங் காலன் என்மேல் விடும்போது, வெளி நில் கண்டாய்
பாலையும் தேனையும் பாகையும் போலும் பணிமொழியே.

**எளிய தமிழில்**

துடைக்கும் கொடுங் காலன் முக்கிளையாம் திரிசூலமேவுகையில்
தேடிக்காண அயன்மால் மறைவானவர் முயன்று மியலாதவுன்
திருப்பாதம் நின்வளைக் கரசகிதம் என்முன்தோன்றக் கடவாய்
வளைக்கரமா யுன்னோசை என்செவி தெள்ளமிர்தமாம் ஆறுதலாம்
பால்தேன் பாகொத்த என்னன்னையே இன்மொழியாளே

87

# செயற்கரிய செயல் செய்து புகழ் பெற அருள் தாயே



**மூலம்**

மொழிக்கும் நினைவுக்கும் எட்டாத நின் திருமூர்த்தம், என்தன்
விழிக்கும் வினைக்கும் வெளிநின்றதால்,—விழியால் மதனை
அழிக்கும் தலைவர், அழியா விரதத்தை அண்டம் எல்லாம்
பழிக்கும்படி, ஒரு பாகம் கொண்டு ஆளும் பராபரையே.

**எளிய தமிழில்**

மொழிக்கும் மனதுக்கு மெட்ட வியலாநின் திருஉருவமென்
விழிக்கும் வழிபாடு யாவுக்கும் எட்டி நின்றதென் விந்தை
தழைக்கும் உன்கருணை நின்னழகு தெய்வத் திருவடிவம்
பழிக்கும் அண்டம் பலவிதமாய் சிவயோகங் கொண்டே
அழிக்கும் எந்தை இடங் கொண்டு கோலோச்சும் பராபரையே

## 88

# அம்பிகையே உன்னருள் எந்நாளும் பெற அருள் தாயே

**மூலம்**

பரம் என்று உனை அடைந்தேன், தமியேனும், உன் பத்தருக்குள்
தரம் அன்று இவன் என்று தள்ளத் தகாது–தரியலர்தம்
புரம் அன்று எரியப் பொருப்புவில் வாங்கிய, போதில் அயன்
சிரம் ஒன்று செற்ற, கையான் இடப் பாகம் சிறந்தவளே.

**எளிய தமிழில்**

பரமென்றே உனை யென்றும் பூரண சகலமாய்ச் சரணடைந்தேன்
தரமன்று இவன் என்றே நீயெனைப் புறம் தள்ளிவிடாதே அசுரர்
புரமன்று எரிய மேருகிரி வில் நாணேற்ற மாலவன் அஹங்காரம்
கண்டுநின்று தன் புன்முறுவலுறுத்தே புரமழித்து தாமரைவாச மயன்
சிரமொன்று கிள்ளியெறி எந்தை சிவனின் பொற்பாகத் திடமே

89

## யோக சித்தி பெற அருள் தாயே



**மூலம்**

சிறக்கும் கமலத் திருவே. நின்சேவடி சென்னி வைக்கத்
துறக்கம் தரும் நின் துணைவரும் நீயும், துரியம் அற்ற
உறக்கம் தர வந்து, உடம்போடு உயிர் உறவு அற்று அறிவு
மறக்கும் பொழுது, என் முன்னே வரல் வேண்டும் வருந்தியுமே.

**எளிய தமிழில்**

பொற்பாகத் திடமே நானிந்த அவனியில் உடம்பொடு உயிரற்று
அறிவுநிலை மறக்குங் காலம் த்யான சமாதி நிலை தனிலே
நான்போகும் சமயம் நின்சேவடி என்சென்னி வைத்தே யருள
விண்பதவி யருளத் தகும் எந்தையுடன் அபிராமியே என்னன்னையே
நீயும்எழுந்தருளி காட்சி கொடுக்க வேண்டுமே வருந்தாமலே

90

## பிரிந்த தம்பதியர் சேர அருள் தாயே

**மூலம்**

வருந்தாவகை, என் மனத்தாமரையினில் வந்து புகுந்து,
இருந்தாள், பழைய இருப்பிடமாக, இனி எனக்குப்
பொருந்தாது ஒரு பொருள் இல்லை–விண் மேவும் புலவருக்கு
விருந்தாக வேலை மருந்தானதை நல்கும் மெல்லியலே.

**எளிய தமிழில்**

வருந்தா வகையாய் அமர்ந்திட்டா யென்மனத் தாமரையில்
இருந்தாய் விரும்பியே என்னுள்ளம் உன்சொந்த உறைவிடமாய்
பொருந்தா இனியொரு பொருளில்லை என்மனத்தாமரை நீயுறைய
பிறந்தும் இறந்தும் இனிநான் வருந்தேன் பாற்கடல் அமுதம்
விருந்தாய் தேவர்க்களித்த மெல்லியளே மென்கொடி அபிராமியே

**91**

# அரசு காரியங்களில் வெற்றி பெற அருள் தாயே



**மூலம்**

மெல்லிய நுண் இடை மின் அனையாளை விரிசடையோன்
புல்லிய மென் முலைப் பொன் அனையாளை, புகழ்ந்து மறை
சொல்லியவண்ணம் தொழும் அடியாரைத் தொழுமவர்க்கு,
பல்லியம் ஆர்த்து எழ, வெண் பகடு ஊறும் பதம் தருமே.

**எளிய தமிழில்**

மென்கொடி அபிராமியே மின்னலொளித் திருமுக தேவியே எந்தை
அணைக்கர ஆலிங்கன மென்முலைப் பொன்நிறம் உடையாளே
விரிசடையோன் ஸகித அர்த்தநாரியே அன்னையே காமாக்ஷி தேவியே
உபதேச தக்ஷிணாமூர்த்தியே உவகையுடன் இந்திர பதவியருளும்
துணைக்கரம் நீயே நினைத் தொழு மடியார்க்கே

92

## மனப் பக்குவம் பெற அருள் தாயே

**மூலம்**

பதத்தே உருகி, நின் பாதத்திலே மனம் பற்றி, உன்தன்
இதத்தே ஒழுக, அடிமை கொண்டாய், இனி, யான் ஒருவர்
மதத்தே மதி மயங்கேன், அவர் போன வழியும் செல்லேன்–
முதல் தேவர் மூவரும் யாவரும் போற்றும்முகிழ் நகையே.

**எளிய தமிழில்**

தொழுவார் முதல் தேவர் பிரம்மா விஷ்ணு சிவன் மூவரும் யாவரும்
முகிழ்நகையே அபிராமி அன்னையே பக்குவம் தந்தாய் எனக்கே நானுன்
பதம்கண்டேன் மனம் பற்றினேன் நின்பாதம் ஆட்கொண்டாய் அடியேனை
இனிக்காணேன் பிறிதொரு மதம் மதிமயங்கேன் வழிபிற செல்லேன்
உனையே நினைப்பேன் உனையே தொழுவேன் இன்நகையே

# உள்ளத்தே உண்மை ஒளி உண்டாக அருள் தாயே



**மூலம்**

நகையே இது, இந்த ஞாலம் எல்லாம் பெற்ற நாயகிக்கு,
முகையே முகிழ் முலை, மானே, முது கண் முடிவுயில், அந்த
வகையே பிறவியும், வம்பே, மலைமகள் என்பதும் நாம்,
மிகையே இவள்தன் தகைமையை நாடி விரும்புவதே.

**எளிய தமிழில்**

நகைப்பே யாமிதுனை அரும்பு முலை தாமரை மொட்டு என்பதெலாம்
வகைப்படி பிறவியற்ற உனையே மலைமகளே அரசியே உரைப்பதெலாம்
மிகையாய் உன்னியல்பை இயம்புவதே என்னறிவுக்கே மிஞ்சியதாம்
உருவாய் உனைக் கற்பித்தே உன்பாத மென்மனக் கண்ணால் கண்டே
அருவாய் ஜோதியாய் என்மனம் நாடி விரும்பியதே

# மன நிலை தூய்மையாக அருள் தாயே

**மூலம்**

விரும்பித் தொழும் அடியார் விழிநீர் மல்கி, மெய் புளகம்
அரும்பித் ததும்பிய ஆனந்தம் ஆகி, அறிவு இழந்து
கரும்பின் களித்து, மொழி தடுமாறி, முன் சொன்ன எல்லாம்
தரும் பித்தர் ஆவர் என்றால் அபிராமி சமயம் நன்றே.

**எளிய தமிழில்**

நாடி விரும்பி உனைத்தொழும் பேற்றில் அடியவர் விழி நீர் மல்கி
தேன் குடித்த வண்டாய் உளமயங்கி உன்னருளில் நினை விழந்து
நாத் தழுதழுத்து பாடிய புகழ் யாவும் அனைத்தும் பொருளாய்ப்
புரி பித்தாய் வழிபடுமுன் வழி நெறியே அதுவே அபிராமி சமயமாம்
சரி யென்றே சொல்வேன் அன்னையே உனதருள் என்றே

95

## மன உறுதி பெற அருள் தாயே



**மூலம்**

நன்றே வருகினும், தீதே விளைகினும், நான் அறிவது
ஒன்றேயும் இல்லை, உனக்கே பரம்: எனக்கு உள்ளம் எல்லாம்
அன்றே உனது என்று அளித்து விட்டேன்:- அழியாத குணக்
குன்றே, அருட்கடலே, இமவான் பெற்ற கோமளமே.

**எளிய தமிழில்**

என்று மழியா குணக் குன்றே வற்றாக் கருணா சாகரமே சங்கரியே
நன்றே வருகினும் தீதே விளைகினும் உனக்கே பாரமாம் எனக்கல்லவே
அன்றே நீயெனை ஆட்கொண்ட நொடியே அர்ப்பணம் செய்தே னெனையே
சென்றே னுன்வழியே சிந்தை உன்னிடம் நானோ தாயிடை சேயாய்க்
கனிந்தே னுன்னருட் கடலில் இமவான் பெற்ற கோமளமே

# எங்கும் தலைமையும் புகழும் பெற அருள் தாயே

**மூலம்**

கோமளவல்லியை, அல்லியந் தாமரைக் கோயில் வைகும்
யாமள வல்லியை, ஏதம் இலாளை, எழுதரிய
சாமள மேனிச் சகலகலா மயில்தன்னை, தம்மால்
ஆமளவும் தொழுவார், எழு பாருக்கும் ஆதிபரே.

**எளிய தமிழில்**

கோமள வல்லியாய் அழகிய தாமரைக் கோவி லுறை பேரெழிலே
யாமள வல்லியாய் சாக்ததந்திர சாஸ்திரக் கொடியொத்த பூங்கொடியே
சாமள நிற ஓவியப் பொருளே சகல கலா மயில் சாயை தோய்ந்தவளே
பவள முத்து பல்பொருள் பரவினும் நின்னருளுக்கு இணை தானுண்டோ
ஆமள வுமுனைத் தொழுதாலும் ஏழுலகுக்கும் அரசாவேனே

## 97

# புகழும் தர்மமும் வளர அருள் தாயே

**மூலம்**

ஆதித்தன், அம்புலி, அங்கி குபேரன், அமரர்தம் கோன்,
போதிற் பிரமன் புராரி, முராரி பொதியமுனி,
காதிப் பொருபடைக் கந்தன், கணபதி, காமன் முதல்
சாதித்த புண்ணியர் எண்ணிலர் போற்றுவர், தையலையே.

**எளிய தமிழில்**

அரசோச்சும் சூரியன் சந்திரன் அக்கினி குபேரன் தேவராஜனாம் இந்திரனும்
தாமரையமர் பிரம்மன் திரிபுர மெரித்த எந்தை முரனை யழித்த மாலவன்
பொதிகைமுனி அகத்தியன் பகைவரழி சிவமைந்தன் வேலாயுத முருகன்
பானைவயிறோன் விக்ன விநாயகன் காமன் முதல் சாதித்த புண்ணியர்
அவனியடங்கா எண்ணிலர் போற்றுவர் தையலே உன்னையே

98

## வஞ்சகர் தொல்லை நீக்கி அருள் தாயே

**மூலம்**

தைவந்து நின் அடித் தாமரை சூடிய சங்கரற்கு
கைவந்த தீயும், தலை வந்த ஆறும், கரலந்தது எங்கே?–
மெய் வந்த நெஞ்சின் அல்லால் ஒருகாலும் விரகர் தங்கள்
பொய்வந்த நெஞ்சில், புகல் அறியா மடப் பூங் குயிலே.

**எளிய தமிழில்**

தையலே வஞ்சக ருள்ளம் புகா இளம் மாமயிலே தாயே தேவியே
மையலா யுன்னருள் தேடியே வழிகாணு முன்னடியார் தொழு
திருவடி உனதை வருடு எந்தை சங்கரனும் கையணிந்த தீயை
பிறைசூடிய ஆறையும் நின்ஊடல் தணிக்கவே எங்கு மறைத்தாரோ
பொய்நெஞ்சில் புகலறியா இளம் பூங்குயிலே

99

## அருள் உணர்வு வளர அருள் தாயே

**மூலம்**

குயிலாய் இருக்கும் கடம்பாடவியிடை, கோல வியன்
மயிலாய் இருக்கும் இமயாசலத்திடை, வந்து உதித்த
வெயிலாய் இருக்கும் விசும்பில், கமலத்தின்மீது அன்னமாம்,
கயிலாயருக்கு அன்று இமவான் அளித்த கனங்குழையே

**எளிய தமிழில்**

குயிலா யிசைக்கிறாய் தேவிநீ கடம்ப வனக் கோலாகலத்தில்
மயிலாய் நடமிடுவாய் அம்மநீ இமய மலைப் பெரெழிலில்
வெயிலாய் ஒளிர்கிறாய் உதயக் கதிரவனாய் செந்நிறத்தவளே
மையலாய் உறைகிறாய் மனதர்ப்பணித்த அடியார் நெஞ்சில்
கயிலை யுறை எந்தைக்கு இமவா னளித்த பொன்குழையே

## 100

# அம்பிகையே உன் சொரூபம் எப்போதும் காண அருள் தாயே

**மூலம்**

குழையைத் தழுவிய கொன்றையந் தார் கமழ் கொங்கைவல்லி
கழையைப் பொருத திருநெடுந் தோளும், கருப்பு வில்லும்
விழையப் பொரு திறல் வேரியம் பாணமும் வெண் நகையும்
உழையைப் பொருகண்ணும் நெஞ்சில் எப்போதும் உதிக்கின்றவே!

**எளிய தமிழில்**

குழையத் தழுவினாய் எந்தை திருமேனியை அவர்தம் கொன்றை
மலர்பதிய கமழுமணங் கொண்டதே யுன் திருத்தனங்கள் தாங்கு
மூங்கிலனைய நின்நீள்தோளும் கரும்புவில்லும் வெண்முத்து நகையும்
புன்னகை வதனமும் மானொத்த இருகண்ணும் சதா யென்னுள்ளில்
உதிக்குதே யெப்போதும் ஒளிருதே உதயக் கதிராய்

# நூற்பயன்

**மூலம்**

ஆத்தாளை, எங்கள் அபிராம வல்லியை, அண்டம் எல்லாம்
பூத்தாளை, மாதுளம் பூ நிறத்தாளை, புவி அடங்கக்
காத்தாளை, ஐங்கணைப் பாசங்குசமும் கருப்புவில்லும்
சேர்த்தாளை, முக்கண்ணியைத், தொழுவார்க்கு ஒரு தீங்கு இல்லையே.

**எளிய தமிழில்**

அன்னையவளை எங்கள் அபிராமி வல்லியை அகிலஉலகும்
அரும்பியவளை மாதுளச் செந்நிறத்தவளை புவிமுழுதும்
அடக்குபவளை அங்குச பாசம் கரும்பு வில்லும் திருக்கரத்தில்
அணிந்தவளை வழிபட அடியார்க்கொரு தீங்கில்லையே
அனுதினமவளை தொழுவோம் தொழுதே எழுவோம்

அபிராமி அந்தாதி நூறு பாடல்கள் நிறைவுற்றது

அவளை அவளருளால் அழகுப் பண்ணால் துதிக்கப் பண்ணியதற்கு அத்தனை பெருமையும் அவளையே சாரும். நூறு நாள் தொடர்ச்சியாய் இதைச் செய்ய விக்னங்கள் இல்லாமல் நடத்திக் கொடுத்த குழந்தை தெய்வம் விநாயகரை நமஸ்கரிக்கின்றேன். அவள் சொல் அவள் பொருள் அடியேன் ஒரு பூஜாரி அவ்வளவே. அர்ச்சிக்கத் தூண்டி அர்ச்சிக்க வைத்து அருள் செய்தவள் அவளே. அவள் தாள் பணிவோம்.

# Free Tamil Ebooks - எங்களைப் பற்றி

**மின்புத்தகங்களைப் படிக்க உதவும் கருவிகள்:**

மின்புத்தகங்களைப் படிப்பதற்கென்றே கையிலேயே வைத்துக் கொள்ளக்கூடிய பல கருவிகள் தற்போது சந்தையில் வந்துவிட்டன. Kindle, Nook, Android Tablets போன்றவை இவற்றில் பெரும்பங்கு வகிக்கின்றன. இத்தகைய கருவிகளின் மதிப்பு தற்போது 4000 முதல் 6000 ரூபாய் வரை குறைந்துள்ளன. எனவே பெரும்பான்மையான மக்கள் தற்போது இதனை வாங்கி வருகின்றனர்.

**ஆங்கிலத்திலுள்ள மின்புத்தகங்கள்:**

ஆங்கிலத்தில் லட்சக்கணக்கான மின்புத்தகங்கள் தற்போது கிடைக்கப் பெறுகின்றன. அவை PDF, EPUB, MOBI, AZW3. போன்ற வடிவங்களில் இருப்பதால், அவற்றை மேற்கூறிய கருவிகளைக் கொண்டு நாம் படித்துவிடலாம்.

**தமிழிலுள்ள மின்புத்தகங்கள்:**

தமிழில் சமீபத்திய புத்தகங்களெல்லாம் நமக்கு மின்புத்தகங்களாக கிடைக்கப்பெறுவதில்லை. ProjectMadurai.com எனும் குழு தமிழில் மின்புத்தகங்களை வெளியிடுவதற்கான ஓர் உன்னத சேவையில் ஈடுபட்டுள்ளது. இந்தக் குழு இதுவரை வழங்கியுள்ள தமிழ் மின்புத்தகங்கள் அனைத்தும் PublicDomain-ல் உள்ளன. ஆனால் இவை மிகவும் பழைய புத்தகங்கள்.

சமீபத்திய புத்தகங்கள் ஏதும் இங்கு கிடைக்கப்பெறுவதில்லை.

எனவே ஒரு தமிழ் வாசகர் மேற்கூறிய "மின்புத்தகங்களைப் படிக்க உதவும் கருவிகளை" வாங்கும்போது, அவரால் எந்த ஒரு தமிழ் புத்தகத்தையும் இலவசமாகப் பெற முடியாது.

**சமீபத்திய புத்தகங்களை தமிழில் பெறுவது எப்படி?**

சமீபகாலமாக பல்வேறு எழுத்தாளர்களும், பதிவர்களும், சமீபத்திய நிகழ்வுகளைப் பற்றிய விவரங்களைத் தமிழில் எழுதத் தொடங்கியுள்ளனர். அவை இலக்கியம், விளையாட்டு, கலாச்சாரம், உணவு, சினிமா, அரசியல், புகைப்படக்கலை, வணிகம் மற்றும் தகவல் தொழில்நுட்பம் போன்ற பல்வேறு தலைப்புகளின் கீழ் அமைகின்றன.

நாம் அவற்றையெல்லாம் ஒன்றாகச் சேர்த்து தமிழ் மின்புத்தகங்களை உருவாக்க உள்ளோம்.

அவ்வாறு உருவாக்கப்பட்ட மின்புத்தகங்கள் Creative Commons எனும் உரிமத்தின் கீழ் வெளியிடப்படும். இவ்வாறு வெளியிடுவதன் மூலம் அந்தப் புத்தகத்தை எழுதிய மூல ஆசிரியருக்கான உரிமைகள் சட்டரீதியாகப் பாதுகாக்கப்படுகின்றன. அதே நேரத்தில் அந்த மின்புத்தகங்களை யார் வேண்டுமானாலும், யாருக்கு வேண்டுமானாலும், இலவசமாக வழங்கலாம்.

எனவே தமிழ் படிக்கும் வாசகர்கள் ஆயிரக்கணக்கில் சமீபத்திய தமிழ் மின்புத்தகங்களை இலவசமாகவே பெற்றுக் கொள்ள முடியும்.

**தமிழிலிருக்கும் எந்த வலைப்பதிவிலிருந்து வேண்டுமானாலும் பதிவுகளை எடுக்கலாமா?**

கூடாது.

ஒவ்வொரு வலைப்பதிவும் அதற்கென்றே ஒருசில அனுமதிகளைப் பெற்றிருக்கும். ஒரு வலைப்பதிவின்

ஆசிரியர் அவரது பதிப்புகளை “யார் வேண்டுமானாலும் பயன்படுத்தலாம்” என்று குறிப்பிட்டிருந்தால் மட்டுமே அதனை நாம் பயன்படுத்த முடியும்.

அதாவது “Creative Commons” எனும் உரிமத்தின் கீழ் வரும் பதிப்புகளை மட்டுமே நாம் பயன்படுத்த முடியும்.

அப்படி இல்லாமல் “All Rights Reserved” எனும் உரிமத்தின் கீழ் இருக்கும் பதிப்புகளை நம்மால் பயன்படுத்த முடியாது.

வேண்டுமானால் “All Rights Reserved” என்று விளங்கும் வலைப்பதிவுகளைக் கொண்டிருக்கும் ஆசிரியருக்கு அவரது பதிப்புகளை “Creative Commons” உரிமத்தின் கீழ் வெளியிடக்கோரி நாம் நமது வேண்டுகோளைத் தெரிவிக்கலாம். மேலும் அவரது படைப்புகள் அனைத்தும் அவருடைய பெயரின் கீழே தான் வெளியிடப்படும் எனும் உறுதியையும் நாம் அளிக்க வேண்டும்.

பொதுவாக புதுப்புது பதிவுகளை உருவாக்குவோருக்கு அவர்களது பதிவுகள் நிறைய வாசகர்களைச் சென்றடைய வேண்டும் என்ற எண்ணம் இருக்கும். நாம் அவர்களது படைப்புகளை எடுத்து இலவச மின்புத்தகங்களாக வழங்குவதற்கு நமக்கு
அவர்கள் அனுமதியளித்தால், உண்மையாகவே அவர்களது படைப்புகள் பெரும்பான்மையான மக்களைச் சென்றடையும். வாசகர்களுக்கும் நிறைய புத்தகங்கள் படிப்பதற்குக் கிடைக்கும்

வாசகர்கள் ஆசிரியர்களின் வலைப்பதிவு முகவரிகளில் கூட அவர்களுடைய படைப்புகளை தேடிக் கண்டுபிடித்து படிக்கலாம். ஆனால் நாங்கள் வாசகர்களின் சிரமத்தைக் குறைக்கும் வண்ணம் ஆசிரியர்களின் சிதறிய வலைப்பதிவுகளை ஒன்றாக இணைத்து ஒரு முழு மின்புத்தகங்களாக உருவாக்கும் வேலையைச் செய்கிறோம். மேலும் அவ்வாறு உருவாக்கப்பட்ட புத்தகங்களை “மின்புத்தகங்களைப் படிக்க உதவும் கருவிகள்”-க்கு ஏற்ற வண்ணம் வடிவமைக்கும் வேலையையும் செய்கிறோம்.

### FreeTamilEbooks.com

இந்த வலைத்தளத்தில்தான் பின்வரும் வடிவமைப்பில் மின்புத்தகங்கள் காணப்படும்.

PDF for desktop, PDF for 6” devices, EPUB, AZW3, ODT

இந்த வலைதளத்திலிருந்து யார் வேண்டுமானாலும் மின்புத்தகங்களை இலவசமாகப் பதிவிறக்கம்(download) செய்து கொள்ளலாம்.

அவ்வாறு பதிவிறக்கம்(download) செய்யப்பட்ட புத்தகங்களை யாருக்கு வேண்டுமானாலும் இலவசமாக வழங்கலாம்.

**இதில் நீங்கள் பங்களிக்க விரும்புகிறீர்களா?**

நீங்கள் செய்யவேண்டியதெல்லாம் தமிழில் எழுதப்பட்டிருக்கும் வலைப்பதிவுகளிலிருந்து பதிவுகளை எடுத்து, அவற்றை LibreOffice/MS Office போன்ற wordprocessor-ல் போட்டு ஓர் எளிய மின்புத்தகமாக மாற்றி எங்களுக்கு அனுப்பவும்.

அவ்வளவுதான்!

மேலும் சில பங்களிப்புகள் பின்வருமாறு:

1. ஒருசில பதிவர்கள்/எழுத்தாளர்களுக்கு அவர்களது படைப்புகளை “Creative Commons” உரிமத்தின்கீழ் வெளியிடக்கோரி மின்னஞ்சல் அனுப்புதல்
2. தன்னார்வலர்களால் அனுப்பப்பட்ட மின்புத்தகங்களின் உரிமைகளையும் தரத்தையும் பரிசோதித்தல்
3. சோதனைகள் முடிந்து அனுமதி வழங்கப்பட்ட தரமான மின்புத்தகங்களை நமது வலைதளத்தில்

பதிவேற்றம் செய்தல்

விருப்பமுள்ளவர்கள் freetamilebooksteam@gmail.com எனும் முகவரிக்கு மின்னஞ்சல் அனுப்பவும்.

**இந்தத் திட்டத்தின் மூலம் பணம் சம்பாதிப்பவர்கள் யார்?**

யாருமில்லை.

இந்த வலைத்தளம் முழுக்க முழுக்க தன்னார்வலர்களால் செயல்படுகின்ற ஒரு வலைத்தளம் ஆகும். இதன் ஒரே நோக்கம் என்னவெனில் தமிழில் நிறைய மின்புத்தகங்களை உருவாக்குவதும், அவற்றை இலவசமாக பயனர்களுக்கு வழங்குவதுமே ஆகும்.

மேலும் இவ்வாறு உருவாக்கப்பட்ட மின்புத்தகங்கள், ebook reader ஏற்றுக்கொள்ளும் வடிவமைப்பில் அமையும்.

**இத்திட்டத்தால் பதிப்புகளை எழுதிக்கொடுக்கும் ஆசிரியர்/பதிவருக்கு என்ன லாபம்?**

ஆசிரியர்/பதிவர்கள் இத்திட்டத்தின் மூலம் எந்தவிதமான தொகையும் பெறப்போவதில்லை. ஏனெனில், அவர்கள் புதிதாக இதற்கென்று எந்தஒரு பதிவையும் எழுதித்தரப்போவதில்லை.

ஏற்கனவே அவர்கள் எழுதி வெளியிட்டிருக்கும் பதிவுகளை எடுத்துத்தான் நாம் மின்புத்தகமாக வெளியிடப்போகிறோம்.

அதாவது அவரவர்களின் வலைதளத்தில் இந்தப் பதிவுகள் அனைத்தும் இலவசமாகவே கிடைக்கப்பெற்றாலும், அவற்றையெல்லாம் ஒன்றாகத் தொகுத்து ebook reader போன்ற கருவிகளில் படிக்கும் விதத்தில் மாற்றித் தரும் வேலையை இந்தத் திட்டம் செய்கிறது.

தற்போது மக்கள் பெரிய அளவில் tablets மற்றும் ebook readers போன்ற கருவிகளை நாடிச் செல்வதால் அவர்களை நெருங்குவதற்கு இது ஒரு நல்ல வாய்ப்பாக அமையும்.

**நகல் எடுப்பதை அனுமதிக்கும் வலைதளங்கள் ஏதேனும் தமிழில் உள்ளதா?**

உள்ளது.

பின்வரும் தமிழில் உள்ள வலைதளங்கள் நகல் எடுப்பதினை அனுமதிக்கின்றன.

1. www.vinavu.com

2. www.badriseshadri.in

3. http://maattru.com

4. kaniyam.com

5. blog.ravidreams.net

**எவ்வாறு ஓர் எழுத்தாளரிடம் Creative Commons உரிமத்தின் கீழ் அவரது படைப்புகளை வெளியிடுமாறு கூறுவது?**

இதற்கு பின்வருமாறு ஒரு மின்னஞ்சலை அனுப்ப வேண்டும்.

<துவக்கம்>

உங்களது வலைத்தளம் அருமை [வலைதளத்தின் பெயர்].

தற்போது படிப்பதற்கு உபயோகப்படும் கருவிகளாக Mobiles மற்றும் பல்வேறு கையிருப்புக் கருவிகளின்

எண்ணிக்கை அதிகரித்து வந்துள்ளது.

இந்நிலையில் நாங்கள் http://www.FreeTamilEbooks.com எனும் வலைதளத்தில், பல்வேறு தமிழ் மின்புத்தகங்களை வெவ்வேறு துறைகளின் கீழ் சேகரிப்பதற்கான ஒரு புதிய திட்டத்தில் ஈடுபட்டுள்ளோம்.

இங்கு சேகரிக்கப்படும் மின்புத்தகங்கள் பல்வேறு கணிணிக் கருவிகளான Desktop,ebook readers like kindl, nook, mobiles, tablets with android, iOS போன்றவற்றில் படிக்கும் வண்ணம் அமையும். அதாவது இத்தகைய கருவிகள் support செய்யும் odt, pdf, ebub, azw போன்ற வடிவமைப்பில் புத்தகங்கள் அமையும்.

இதற்காக நாங்கள் உங்களது வலைதளத்திலிருந்து பதிவுகளை
பெற விரும்புகிறோம். இதன் மூலம் உங்களது பதிவுகள்
உலகளவில் இருக்கும் வாசகர்களின் கருவிகளை நேரடியாகச் சென்றடையும்.

எனவே உங்களது வலைதளத்திலிருந்து பதிவுகளை பிரதியெடுப்பதற்கும் அவற்றை மின்புத்தகங்களாக மாற்றுவதற்கும் உங்களது அனுமதியை வேண்டுகிறோம்.

இவ்வாறு உருவாக்கப்பட்ட மின்புத்தகங்களில் கண்டிப்பாக ஆசிரியராக உங்களின் பெயரும் மற்றும் உங்களது வலைதள முகவரியும் இடம்பெறும். மேலும் இவை "Creative Commons" உரிமத்தின் கீழ் மட்டும்தான் வெளியிடப்படும் எனும் உறுதியையும் அளிக்கிறோம்.

http://creativecommons.org/licenses/

நீங்கள் எங்களை பின்வரும் முகவரிகளில் தொடர்பு கொள்ளலாம்.

e-mail : **freetamilebooksteam@gmail.com**
FB : https://www.facebook.com/FreeTamilEbooks

G +: https://plus.google.com/communities/108817760492177970948

நன்றி.

</முடிவு>

மேற்கூறியவாறு ஒரு மின்னஞ்சலை உங்களுக்குத் தெரிந்த அனைத்து எழுத்தாளர்களுக்கும் அனுப்பி அவர்களிடமிருந்து அனுமதியைப் பெறுங்கள்.

முடிந்தால் அவர்களையும் "Creative Commons License"-ஐ அவர்களுடைய வலைதளத்தில் பயன்படுத்தச் சொல்லுங்கள்.

கடைசியாக அவர்கள் உங்களுக்கு அனுமதி அளித்து அனுப்பியிருக்கும் மின்னஞ்சலை**freetamilebooksteam@gmail.com** எனும் முகவரிக்கு அனுப்பி வையுங்கள்.

**ஓர் எழுத்தாளர் உங்களது உங்களது வேண்டுகோளை மறுக்கும் பட்சத்தில் என்ன செய்வது?**

அவர்களையும் அவர்களது படைப்புகளையும் அப்படியே விட்டுவிட வேண்டும்.

ஒருசிலருக்கு அவர்களுடைய சொந்த முயற்சியில் மின்புத்தகம் தயாரிக்கும் எண்ணம்கூட இருக்கும். ஆகவே அவர்களை நாம் மீண்டும் மீண்டும் தொந்தரவு செய்யக் கூடாது.

அவர்களை அப்படியே விட்டுவிட்டு அடுத்தடுத்த எழுத்தாளர்களை நோக்கி நமது முயற்சியைத் தொடர வேண்டும்.

**மின்புத்தகங்கள் எவ்வாறு அமைய வேண்டும்?**

ஒவ்வொருவரது வலைத்தளத்திலும் குறைந்தபட்சம் நூற்றுக்கணக்கில் பதிவுகள் காணப்படும். அவை வகைப்படுத்தப்பட்டோ அல்லது வகைப்படுத்தப் படாமலோ இருக்கும்.

நாம் அவற்றையெல்லாம் ஒன்றாகத் திரட்டி ஒரு பொதுவான தலைப்பின்கீழ் வகைப்படுத்தி மின்புத்தகங்களாகத் தயாரிக்கலாம். அவ்வாறு வகைப்படுத்தப்படும் மின்புத்தகங்களை பகுதி-I பகுதி-II என்றும் கூட தனித்தனியே பிரித்துக் கொடுக்கலாம்.

**தவிர்க்க வேண்டியவைகள் யாவை?**

இனம், பாலியல் மற்றும் வன்முறை போன்றவற்றைத் தூண்டும் வகையான பதிவுகள் தவிர்க்கப்பட வேண்டும்.

**எங்களைத் தொடர்பு கொள்வது எப்படி?**

நீங்கள் பின்வரும் முகவரிகளில் எங்களைத் தொடர்பு கொள்ளலாம்.

- **email : freetamilebooksteam@gmail.com**
- Facebook: https://www.facebook.com/FreeTamilEbooks
- Google Plus: https://plus.google.com/communities/108817760492177970948

**இத்திட்டத்தில் ஈடுபட்டுள்ளவர்கள் யார்?**

- **Shrinivasan tshrinivasan@gmail.com**
- **Alagunambi Welkin** alagunambiwelkin@fsftn.org
- **Arun** arun@fsftn.org
- இரவி

**Supported by**

- Free Software Foundation TamilNadu, www.fsftn.org
- Yavarukkum Software Foundation http://www.yavarkkum.org/